இப்பொழுது
விற்பனையாகிறது!

# மங்கை

# தீபாவளி மலர்

## (நவம்பர் '97)

உயர்ந்த படைப்புகள்!
உள்ளத்தைத் தொடும் கதைகள்!
வியக்க வைக்கும் அழகிய அமைப்பு
வித்தியாசமான வாசக அனுபவம்.

இந்த இதழ் முதல்

**எஸ். விஜயன்**

எழுதும் புதிய தொடர்

## சத்திய தரிசனம்

(பிரபலங்களின் வாழ்வில் சாயி
அன்னை நிகழ்த்திய அற்புதங்கள்)



இத்துடன்
இலவச இணைப்பாக

## மங்கை ஆலய மலர்

**விலை ரூ.25/—**

கடைகளில் மலர் கிடைக்காதவர்கள் தபால் செலவு உட்பட ரூ.35/— மணியார்டர் மூலம் அனுப்பி வைத்தால் மங்கை தீபாவளி மலர் பதிவுத் தபாலில் உங்கள் வீடு தேடி வரும்.

முகவரி : டால்டன் ஏஜென்ஸீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை—600 026.

## மங்கை

# தீபாவளி மலர்

'இலவச இணைப்பான'

# ஆலய மலர்

பக்திப் பரவச மணம் கமழ... பின்வரும் திருத்தலங்கள் பற்றிய சிறப்புக் கட்டுரைகளை ஏந்தி வந்துள்ளது.

- அருள்மிகு அகத்தீஸ்வர சுவாமி திருக்கோயில்
- வேகாமங்கலம் மன்னாத ஈஸ்வரன் கோயில்
- திரு விண்ணகரம்
- வயிரவன் பட்டி
- நேமம் செயங்கொண்டான்
- இளையாத்தாங்குடி
- மாத்தூர் ஐந்நூற்றீஸ்வரர்
- இரணியூர் ஆட்கொண்ட நாதர்
- திருமெய்யம் சத்திய மூர்த்தி
- மடவார் வளாகம்
- தென்னாங்கூர் பண்டரிநாதன்
- யாழ்ப்பாணம் நாச்சிமார் கோயில்
- கீரிமலைச் சிவன் கோயில்



- பண்டாரியாவெளி நாகதம்பிரான்
- கொக்கட்டிச் சோலை தான் தோன்றீஸ்வரம்
- தக்கோலம் மஹாதேவர்
- வன்னி மலை
- தெகிவளை ஆஞ்சநேயர்
- திருக்கோஷ்டியூர்
- சுவிட்சர்லாந்து மனோன்மணி அம்பாள்
- குற்றாலம் ராஜ ராஜேஸ்வரி கோயில்
- வெண்ணெய் ஈஸ்வரன் ஆலயம்
- சோலாபுரி அம்மன்
- நாட்டரசன் கோட்டை கண்ணாத்தாள்
- பண்டர்பூர் பாண்டுரங்க விட்டல்நாத் கோயில்
- பசுபதி நாதர் கோயில்
- கல்லாங்குடி திருப்பாத்தீஸ்வர உடையார்
- அழகப்பா நகர் சிவா விஷ்ணு ஆலயம்
- மும்பையின் புராதன சிவாலயங்கள்
  1. பாபூல்நாத் மந்திர்
  2. வல்கேஸ்வர் மந்திர்
  3. அம்பர்நாத் மந்திர்.
- மும்பையின் அம்பாள் கோயில்கள்
  1. ஆதி தெய்வம் மும்பாதேவி
  2. மகாலக்ஷ்மி கோயில்
  3. அம்பா பவானி மந்திர்
  4. ஸ்ரீசாரதாம்பாள் கோயில்
- மகாராஷ்டிராவின் ஜோதிர்லிங்க க்ஷேத்திரங்கள்
  1. அவுந்த் நாகநாத்
  2. பரளி வைத்தியநாத்
  3. க்ருணேச்வர்
  4. பீமா சங்கர்
  5. த்ரியம்பகேச்வர்.

**சுமார் 40க்கும் மேற்பட்ட கோயில்கள்!**



# அம்புலிமாமா

## நவம்பர் 1997



## பொருளடக்கம்





**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**

# அம்புலிமாமா




*நிறுவனர்:* **'சக்கரபாணி'** *நிர்வாக ஆசிரியர்:* **நாகிரெட்டி**

## நம் விடுதலைப் போரில் அயல் நாட்டவர்

நாம் சுதந்திரம் பெற்ற பொன் விழா ஆண்டில் நாட்டின் சுதந்திரத்திற்காகப் பாடுபட்ட அனைவரையும் நினைத்துக் கொண்டு அவர்களுக்குத் தலை வணங்கி மரியாதை செலுத்தி வருகிறோம். விடுதலைப் போர் வீரர்கள் ஆங்கிலேயர் ஆட்சியில் பட்ட கஷ்ட நஷ்டங்கள் கணக்கில் அடங்கா. அவற்றைக் கேட்டாலே அப்போதைய ஆட்சியாளர் மீது வெறுப்பும் அருவருப்பும் ஏற்படவே செய்கிறது.

ஆனால் அயல் நாட்டவரில் நம் சுதந்திர போருக்கு ஆதரவும் உதவியும் புரிந்தவர்களை மறந்து விட முடியுமா? இவர்கள் இந்தியப் பண்பாட்டையும் இந்திய நாட்டின் உயர்வையும் எண்ணிப் பலவிதத்திலும் உதவினார்கள். சிலர் இந்திய இலக்கியங்களை ஆங்கிலத்திலும் பிற அயல் நாட்டு மொழிகளிலும் மொழியாக்கம் செய்தனர். சிலர் அஜந்தா, எல்லோரா, சாஞ்சி போன்ற வரலாற்றுச் சிறப்பு மிக்க இடங்களைத் தேடிக் கண்டு பிடித்துத் தெரிய வைத்தார்கள். இவர் மொழி, சமுதாயம் ஆகியவற்றிற்குப் பல விதங்களில் நற் பணிகள் புரிந்துள்ளனர்.

இவர்கள் எந்நாட்டவராயினும் நாம் அவர்களது நற்பணிகளை நினைத்து நன்றி கூறுவோமாக.

**மதிமுகம்: 101** **நவம்பர் 1997** **புன்னகை: 5**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



செய்திகளும் தகவல்களும்

## ஸ்காட்லாண்டிற்கு தனி நாடாளுமன்றம்

ஸ்காட்லாண்டு 1707ல் யூனியன் சட்டம் அமுலுக்கு வந்ததிலிருந்து சுமார் 290 ஆண்டுகளாக யுனைடட் கிங்க்டத்தின் ஒரு பகுதியாக இருந்து வருகிறது. இங்கிலாந்தின் பார்லிமெண்டிற்குத் தன் பிரதிநிதிகளை அனுப்பி வருகிறது.

இரண்டாவது உலகப் போருக்குப் பின் ஸ்காட்லாண்டு சுதந்திர நாடாக இல்லாது போனாலும் தனி நாடாளும் மன்றமாவது தனக்கு இருக்க வேண்டும் என்ற கோரிக்கையை எழுப்பியது. அச்சமயத்தில் ஆட்சியில் இருந்த தொழிற் கட்சி அக்கோரிக்கையைக் கொள்கையளவில் ஏற்றது. ஆனால் அது மூன்றாவது முறையாக 1974ல் ஆட்சிக்கு வந்த போதுதான் அக் கோரிக்கை பற்றித் தீவிரமாக யோசித்தது. இதற்காக 1979ல் பொது மக்களின் கணிப்பும் எடுக்கப்பட்டது. அப்போது நாற்பது சதவீதத்தினரே அக்கோரிக்கைக்கு ஆதரவாக வாக்களித்தனர். அப்போது கன்ஸர்வெடிவ் கட்சி ஆட்சியில் இருந்ததால் அக்கோரிக்கை புறக்கணிக்கப்பட்டது.

சென்ற மே மோதம் நடந்த பொதுத் தேர்தலில் தொழிற்கட்சி ஆட்சிக்கு வந்தது. புதிய பிரதம மந்திரி டோனி ப்ளேர். ஸ்காட்லாண்டில் மறுபடியும் பொது மக்களின் வாக்குக் கணிப்பிற்கு உத்திரவிட்டார். அதனால் செப்டம்பர் 11ல் நடந்த பொது மக்கள் வாக்கு கணிப்பில் 74 சதத்தினர் தனி நாடாளும் மன்றக் கோரிக்கைக்கு ஆதரவு தெரிவித்தனர். இப்போதைய திட்டப்படி 1999ல் அந் நாடாளும் மன்றத்திற்கு தேர்தல் நடத்தப்பட்டு 2000ல் ஸ்காட் லாண்டிற்கு தனி நாடாளும் மன்றம அமைக்கப்பட்டு விடும்.

மூன்று நூற்றாண்டுகளுக்கு முன் ஸ்காட்லாண்டிற்குத் தனி நாடாளும் மன்றம் இருந்தது. 13-14 நூற்றாண்டுகளில் இங்கிலாந்திற்கும், ஸ்காட்லாண்டிற்குமிடையே போர்கள் நிகழ்ந்தன. 1828ல் இங்கிலாந்து ஸ்காட்லாண்டை சுதந்திர நாடு என ஒப்புக்கொண்டது. ஆயினும் இரு தரப்பினருக்குமிடையே அமைதி ஏற்படவில்லை. 1628ல் ஸ்காட்லாண்டில் புரட்சி ஏற்பட்டது. ஆங்கிலப் படைத் தளபதி கிராம்வெல் படைகளோடு போய் கலகங்களை அடக்கி 1660ல் ஸ்காட்லாண்டைக் கைப்பற்றினான். 1707ல் அது இங்கிலாந்தின் ஒரு பகுதியாக ஆக்கப்பட்டது.

இப்போதைய அதிகார மாற்றத் திட்டம் யுனைடட் கிங்டம் சிதைந்து போவதற்கு வழி வகுக்குமென சில அரசியல் நோக்கர்கள் கருதுகிறார்கள். ஸ்காட்லாண்டிற்குத் தனி நாடாளும் மன்றம் அமைப்பது அதன் சுதந்திரத்திற்கு முதல் படி எனக் கருதுகிறார்கள். ஸ்காட்லாண்டிற்குப் பின் வேல்ஸிலும் தனி நாடாளும் மன்றத்திற்கான பொது மக்கள் வாக்கு கணிப்பு நடத்தப்பட்டுள்ளது. அங்குள்ள நிலவரத்தைப் பார்த்தால் தற்போதையக் கூட்டமைப்பான யுனைடெட் கிங்க்டம் என்பது இனி இராது எனப் பலர் கருதுகிறார்கள்.





# அதோ பார் மாப்பிள்ளை!

மருதூர் ஜமீனில் நாலைந்து பெரிய கிராமங்களே இருந்தன. மற்றவை சிறியவை. பெரிய கிராமம் ஒன்றில் கிருஷ்ண சாஸ்திரி என்ற புரோகிதர் இருந்தார். அவர் கைராசிக்காரர் என்று பெயர் பெற்றவர். அதனால் அந்த ஜமீனில் எந்த சுபகாரியமும் அவரில்லாமல் நடப்பதே இல்லை அதனால் அவருக்கு நல்ல வருமானம் கிடைத்து வந்தது. அதனால் அவர் பெரும் பணக்காரராக விளங்கினார்.

அவருடைய ஒரே மகள் ராதா. அவள் நல்ல அழகி. புத்திசாலி. நன்கு படித்தவள். இசையில் நல்ல பயிற்சியும் பெற்றாள். பணக்காரரின் ஒரே மகள் என்ற காரணத்தால் அவளுக்கே சாஸ்திரியின் சொத்து முழுவதும் கிடைக்கும என்று எண்ணி பலர் ராதாவைத் தம் வீட்டு மருமகளாக்கிக் கொள்ள போட்டி போட்டுக்கொண்டு முன் வந்தனர். அப்படி வந்த முதலாவது பேர் வழியிடம் கிருஷ்ண சாஸ்திரி'' என் மகளை மணக்கப் போகிறவன் நான்கு வேதங்கள், ஆறு சாஸ்திரங்கள், அறுபத்து நான்கு கலைகள் எல்லாம் கற்றிருக்க வேண்டும். அவன் என் வீட்டிலேயே இருந்து என் புரோகிதத் தொழிலையே வாழ்நாள் முழுவதும் செய்து வர வேண்டும். இந்தத் தகுதிகள் எல்லாம் உங்களுடைய மகனிடம் இருக்கிறதா?'' என்று கேட்டார்.

அவர் பதில் பேசாமல் போய் விட்டார். ஆனால் எல்லோரிடமும் ''கிருஷ்ண சாஸ்திரி தம் மகளைத் திருமணம் செய்து கொடுக்க என்னென்னவோ கடும் நிபந்தனைகளை விதிக்கிறார். அதையெல்லாம் யாராலும் ஏற்க முடியாது'' என்று பிரசாரம் செய்து விட்டார். அதனால் சாஸ்திரியிடம் சம்மந்தம் என்று பேசவே எல்லோரும் பயப்படலாயினர்.

ஒருமுறை மாங்காடு என்ற ஊரில்

—சிவனார் செல்வன்—

நடக்கும் ஒரு உறவினர் வீட்டுக் திரு மணத்திற்கு கிருஷ்ண சாஸ்திரியால் போக முடியவில்லை. ஆனால் அத் திருமணத்திற்கு அவர் தம் மனைவி யையும் மகள் ராதாவையும் அனுப்பி வைத்தார். அத்திருமணத்திற்கு நவ மணி என்ற வாலிபனும் வந்திருந் தான். அவன் மாப்பிள்ளைத் தோழன். மருதூர் ஜமீன்தாரரின் அந்தரங்கச் செயலாளராகப் பணிபுரிந்து வந்தான். இளைஞன், படித்தவன், புத்திசாலி பார்க்க அழகாகவும் இருந்தான். ஆனால் ஏழை.



அத்திருமணத்திற்கு வந்த நவமணி ராதாவைப் பார்த்த பிறகே தானும் கல்யாணம் செய்து கொள்ள வேண்டு மென்று எண்ணத் தொடங்கினான். பிறகு அவன் தன் நண்பனிடம்தான் ராதாவை மணக்க விரும்புவதாகக் கூறினான். அவனது நண்பனோ சிரித்து "அவள் யாரென்று நினைத்து விட்டாய்? கிருஷ்ண சாஸ்திரியின் ஒரே மகள். கிருஷ்ண சாஸ்திரி சாதா ரண ஏழைப் புரோகிதர் அல்ல. பெரிய பணக்காரர். அவரது மகளைத் தம் வீட்டு மருமகளாக ஏற்றுக் கொள்ளப் பல பணக்காரர்கள் துடித்துக் கொண் டிருக்கிறார்கள். ஆனால் அவரிடம் பேச பயப்படுகிறார்கள். ஏனெனில் அவர் அவளை மணப்பவன் இப்படி இருக்க வேண் டும், அப்படி இருக்க வேண்டுமென்று பல கடும் நிபந் தனைகளை விதிக்கிறார். அதனால் அவளை மணக்கும் எண்ணத்தை விட்டு விடு" என்றான்.

நண்பன் சொன்னதைக் கேட்டு நவ மணியும் தான் ராதாவை மணப்பது முடியாத செயல் எனக் கண்டு கொண் டான். தான் அழகனானாலும் ஏழை என்பதையும் தனக்குப் புரோகிதம் செய்யத் தெரியாது என்பதையும் அவன் நினைத்துக் கொண்டு தன் ஆசை நிறைவேறாது என்று தெரிந்து கொண்டான். அதனால் அந்த ஆசையை அவன் அடக்கிக் கொள்ள வேண்டியதாயிற்று.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் மருதூர் ஜமீன்தாரரின் அறுபதாண்டு நிறைவு விழா நடக்க இருந்தது. அது தசராக் கொண்டாட்டங்களை அடுத்து வருவதால் அதனை நடத்திக் கொடுக்க கிருஷ்ண சாஸ்திரியை அவரது குடும் பத்தோடு தசராவுக்கு முன்பே வர வழைத்து விட்டார். சாஸ்திரியையும் அவரது குடும்பத்தினரையும் வசதி யாக இருக்கச் செய்வதும் மற்ற வேலைகளோடு நவமணியின்

TA-F-2



பொறுப்பு என்றும் ஜமீன்தாரர் கூறி விட்டார்.

ஜமீன்தாரரின் அன்பையும் மதிப்பையும் பெற்றுள்ள இளைஞன் நவமணியைச் சற்று அதிகமாகவே கிருஷ்ண சாஸ்திரி கவனிக்கலானார். இரண்டு நாட்கள் கவனித்து நவமணி கெட்டிக்காரன் என்றும் சுறுசுறுப்பாக எந்த வேலையையும் செய்து முடிப்பவன் என்றும் நற்குணங்கள் கொண்டு யாவரிடமும் மரியாதையுடன் நடந்து கொள்பவன் என்றும் கண்டு கொண்டு சந்தோஷப் பட்டார்.

மூன்றாவது நாள் கிருஷ்ண சாஸ்திரி கூறியபடி அறுபது ஆண்டு நிறைவு விழாவுக்கான மேடையை நவமணி அமைக்கச் செய்து விட்டு சாஸ்திரியையும் அழைத்துக் கொண்டு போய் அதைக் காட்டினான். சாஸ்திரியும் அதைப் பார்த்து விட்டு ''பேஷ். பேஷ். மிக நன்றாக அமைந்து விட்டது'' என்றார்.

அப்போது அந்த மேடையை அமைத்த மேஸ்திரி குருநாத ஆசாரியும் அங்கே இருந்தான். நவமணி அவனை சாஸ்திரிக்கு அறிமுகம் செய்து வைக்கவே, அவனும் ''ஒரு நல்ல முகூர்த்தம் பார்த்து இந்த மேடை வேலையை ஆரம்பித்தேன். அதனால் தான் இது இவ்வளவு நன்றாக அமைந்து விட்டது'' என்று சாஸ்திரியை வணங்கியவாறே கூறினான்.

அது கேட்டு நவமணி குருநாதனிடம் ''அப்படியா! முந்தாநாள் கரிநாளாயிற்றே. அன்று ராமப்பனின் வீட்டில் வேலையை ஆரம்பித்தாயே. அது மோசமாகத்தான் முடிந்ததோ?'' என்று குத்தலாகக் கேட்டான். அதைக் கேட்ட குருநாதனின் முகம் சிறுத்து விட்டது. சாஸ்திரி என்ன விஷயம் என்று கேட்பது போல நவமணியைப் பார்த்தார்.

நவமணியும் ''ராமப்பன் ஒரு ஏழை விவசாயி. கஷ்டப்பட்டு பணம் சேர்த்து தன் வீட்டில் ஒரு சிறு மாடி அறை கட்ட விரும்பினான். இந்த குருநாதன் அவனுக்கு நெருங்கிய உறவினன். அந்த மாடி அறை கட்டும் வேலையை ராமப்பன் இவனிடம் ஒப்படைத்து இவன் அதற்காகக் கேட்ட தொகையில் கொஞ்சம் குறைத்துக் கொள்ளும்படிக் கூறினான். அந்த வேலையைத் தான் ஏற்க முடியாது என்றோ அல்லது அப்படிக் குறைக்க முடியாது என்றாவது இவன் சொல்லி இருக்கலாம். அப்படிச் சொல்லாமல் மட்டரக சாமான்களைக் கொண்டு

அதைக் கட்டி விட்டான். ராமப்பன் ''இதென்ன, இப்படிக் கட்டி விட் டாயே'' என்று கேட்டதற்கு இவன் ''எல்லாம் கொடுக்கிற பணத்திற்குத் தக்கபடிதான் செய்ய முடியும்'' என் றான். இங்கே இப்போது ஜமீன்தாரர் பரிசளிப்பார் என்று ஆசைப்பட்டு நன்றாகச்செய்து கொடுத்திருக்கிறான். உங்களிடமிருந்து நல்ல வார்த்தை கேட்க ஏதோ சொல்கிறான்'' என்றான்.

அதைக் கேட்டு கிருஷ்ண சாஸ்திரி குருநாதனைக் கடிந்து கொள்ளப் போகையில் நவமணி ''குருநாதா! நீயோ படித்தவன், முடிவில்லாத காலத்தில் எல்லா நாட்களும் நல்ல நாட்களே. அஷ்டமி, நவமி நல்லது இல்லையென்றால் கிருஷ்ணரும் ராமரும் அந்த நாட்களில் ஏன் பிறந் தார்கள்? கிருஷ்ணரும் ராமரும் மகா விஷ்ணுவின் அவதாரங்கள். கிருஷ் ணர் நல்லவர்களைக் காத்து தீயவர் களை ஒழித்தார். அவர் செய்த கீதோப தேசம் உலகிற்கே வழி காட்டியாக உள்ளது. இராமரும் ராவணன் போன்ற அரக்கர்களை ஒழித்து ராம ராஜ்யம் எனப் புகழப்படும் மக்கள் நல ஆட்சியை அளித்தவர். இப்படிப் பட்டவர்கள் பிறந்தது நல்ல நாட்கள் இல்லையா? ஒரு வேலை ஆரம்பித்து முடிக்க நல்ல மனம் வேண்டும். அந்த வேலையில் முழு ஈடுபாடு இருக்க வேண்டும். இதைத் தெரிந்து கொள்'' என்றான். அதைக் கேட்டு குருநாதன் தலை குனிந்து கொண்டு அங்கிருந்து சென்றான்.

அப்போது கிருஷ்ணசாஸ்திரி ''நவ மணி! எந்த வேலையையும் எந்த நேரத் திலும் ஆரம்பிக்கலாம் என்பதுதான் உன் அபிப்பிராயமா?'' என்று கேட் டார். நவமணியும் ''ஐயா! புரோகித சிரோன்மணியான தங்களுக்கு என் கருத்துக்களால் மன வேதனை ஏற் பட்டிருந்தால் என்னை மன்னியுங் கள். இந்தக் காலத்தில் எவனும்





எதையும் தன் சொந்த லாபத்திற்காகப் பயன்படுத்திக் கொள்ளவே பார்க்கிறான். அதற்கு நல்ல உதாரணம் இந்த குருநாதனே. இப்பேர்பட்ட சமயங்களில் கடவுளே இம்மாதிரியெல்லாம பார்ப்பதில்லை என்று எடுத்துக் கூறுவது நம் போன்ற படித்தவர்கள் செய்ய வேண்டிய கடமைதானே'' என்று பணிவுடன் கூறினான்.

சாஸ்திரியும் ''பேஷ். நாம் இருவரும் வட தென் துருவங்களைப் போலத் தனித்து நின்றாலும் உன் பேச்சு என்னை மிகவும் வசீகரித்து விட்டது'' என்றார். அதைக் கேட்டதும் நவமணியின் முகத்தில் மின்னல் போல ஒரு பாவம் தென்பட்டு மறைந்தது. அவன் ஏதோ சொல்ல முயன்று சட்டென அதைச் சொல்லாமல் அடக்கிக் கொண்டான். அதை கவனித்த கிருஷ்ணசாஸ்திரி ''நவமணி! நீ ஏதோ சொல்ல வந்தாய். ஆனால் சட்டென அடக்கி சொல்லாமல் இருந்து விட்டாயே. என்ன விஷயம்? பட்டென்று சொல்லி விடு'' என்றார்.

நவமணியும் சங்கோசப்பட்டவாறே ''ஒன்றுமில்லை. நான் பேசுவது உங்களை வசீகரிக்கிறது என்று கூறுகிறீர்கள். எனவே நான் ஏதாவது கேட்டால். அதுவும் தங்கள் மனதைக் க்வருமோ என்றுதான் யோசிக்கிறேன்'' என்றான். சாஸ்திரியும் ''எதுவாயிருந்தாலும் சொல். தயங்காதே'' என்றார். நவமணியும் ராதாவை மாங்காட்டுத் திருமணத்தில் பார்த்ததும் அவளை மணக்க விரும்பியதையும், அது இயலாது என அவனது நண்பன் கூறிய காரணத்தையும் சொன்னான். அவன் மேலும் ''உங்கள் மகள் எல்லாத் தகுதிகளையும் உடையவள். ஆனால் நீங்கள் தேர்ந்தெடுக்க விரும்பும் மாப்பிள்ளை இப்படி இருக்க வேண்டும், அப்படி இருக்க வேண்டும் என்று கடும் நிபந்தனைகளை விதிப்பதுதான் எனக்குப் பிடிக்கவில்லை'' என்றான்.

கிருஷ்ண சாஸ்திரியும் ''நவமணி, ராதாவை மணக்க எல்லா வாலிபர்களும் முன் வரத்தான் வருவார்கள். ஏனெனில் அவள் பார்க்கல்ட்சணமாக இருப்பதோடு நன்கு படித்தும் இருக்கிறாள். பல கலைகளை அறிந்தவள். புத்திசாலி. இவற்றோடு அவளது தந்தையான என்னிடம் ஏராளமாய்ப் பணம் இருக்கிறது. ஆனால் ஒரு தந்தை தன் மகளுக்குக் கணவனாக நல்ல குணங்களையும் நல்லொழுக்கத்தையும் உடையவனைத் தேர்ந்

தெடுத்தால்தானே அத் தம்பதிகளின் வாழ்க்கை இன்பமய மாக இருக்கும்? எனக்கு இருப்பது ஒரே மகளென்றும் என்னிடம் ஏராளமான பணம் இருக்கிறது என்றும் கண்டு எல்லோரும் என் சொத்தை என் மகள் வாயிலாக அடையவே விரும்புகிறார்கள். அவர்களிடமிருந்து தப்பவேதான் நிபந்தனைகள் என்று சிலவற்றை சொன்னேன். அவ்வளவுதான்'' என்றார்.

அதைக் கேட்ட நவமணி மகிழ்ந்தவனாய் ''அப்படியானால்...'' என்று ஏதோ சொல்ல ஆரம்பிக்கையில் சாஸ்திரியின் மனைவி ராதாவுடன் அங்கு வந்தாள். தன் கணவருடன் நவமணி பேசிக் கொண்டிருப்பதைக் கண்ட அவள் ''நீங்கள் ஏதோ முக்கியமான விஷயம் பேசிக் கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறது. தசரா விழாவிற்கான மேடை அழகாகத் தயாராகி விட்டது என்று சொன்னார்கள். அதனால் இந்த மேடையைப்பார்க்கவந்தோம்'' என்று அவள் தன் கணவனிடம் கூறினாள்.

சாஸ்திரியும் புன்னகை புரிந்தவாறே ''இதோடு கல்யாண மேடை கூடப் போட வேண்டியதுதான்'' எனவே, அவரது மனைவி ஆச்சரியத்துடன் பார்த்தாள். அவரும் ''ஆம். நம் ராதாவுக்குத்தான். அவள்தான் தனக்குக் கணவனாக வரப் போகிறவனை மாங்காட்டுக் கல்யாணத்தில் மாப்பிள்ளை தோழனாகப் பார்த்திருக்கிறாளே. நீயும் அதோ பார். மாப்பிள்ளை அவன்தான்'' என்று சற்று தூரத்தில் விலகிப் போய் நின்ற நவமணியைக் காட்டினார். ராதாவும் அவனைப் பார்த்து வெட்கத்தால் முகம் சிவக்கத் தலை குனிந்து கொண்டு நின்றாள்.

சாஸ்திரியும் ''நேற்று ராத்திரி உன்னிடம் சொன்னது இந்தப் பையனைத்தான். இப்போது ராதா வும் இதற்குச் சம்மதிக்கிறாள் என்பது அவள் வெட்கப்பட்டுக் கொண்டு நிற்பதிலிருந்தே தெரிகிறது'' என்றார். அப்போது ராதா மேலும் வெட்கப்பட்டாள். சாஸ்திரியும் நவமணியைத் தம் மருகே அழைத்து ''நவமணி! உன் ஆசைப்படி ராதா உன் மனைவியாகப் போகிறாள்'' என்றார் சிரித்துக் கொண்டே நவமணியும் ''எல்லாம் உங்கள் ஆசைப்படியும் நடந்து விட்டதல்லவா'' என்றான் நாணிக் கோணிக் கொண்டே.



# கைவிளக்கும் கிளிக் கூண்டும்

வேலனும் முருகனும் நண்பர்கள். ஆனால் அவர்களிடமிருந்த கெட்ட பழக்கம் மது அருந்துவது. இருவரும் சேர்ந்து தம் மனைவிகளுக்குத் தெரியாமல் எங்காவது போய்க் குடித்து விட்டு மெதுவாக வீடு திரும்புவார்கள்.

ஒருமுறை அவ்விருவரின் மனைவிகளும் ஊரில் இருக்கவில்லை. அவர்கள் தம் பிறந்த வீடுகளுக்குப் போயிருந்தனர். அதனால் வேலன் முருகனிடம் ''முருகா! இன்றிரவு என் வீட்டிற்கு வந்து விடு. நாம் பயமில்லாமல் குடித்து விட்டு இருப்போம்'' என்றான். முருகனும் அதற்குச் சம்மதித்து அன்றிரவு தன் வீட்டு மண்ணெண்ணெய் லாந்தலை எடுத்தக் கொண்டு வேலனின் வீட்டிற்குச் சென்றான்.

நண்பர்கள் இருவரும் குடித்து விட்டுத் தம்மை மறந்து கிடந்தனர். சற்று நேரமானதும் போதை தெளிய முருகன் தன் வீட்டிற்குப் போவதாகக் கூறி லாந்தலை எடுத்துக் கொண்டு தன் வீடு போய்ச் சேர்ந்தான். ஒரு சில நிமிடங்களில் வேலனின் வேலையாள் வந்து முருகனிடம் ஒரு கடிதத்தையும் லாந்தலையும் கொடுத்தான். கடிதத்தில் ''முருகா! நீ உன் லாந்தலை எடுத்துச் செல்லவில்லை. என் மனைவியின் கிளிக் கூண்டை லாந்தல் என எண்ணி எடுத்துப் போய் விட்டாய். அதைக் கொடுத்து அனுப்பு. அதில்லாவிட்டால் என் மனைவி என்னை திரும்பிக் கூடப் பார்க்க மாட்டாள். அதனால் இனிமேல் இந்த மாதிரித் தவறு நேராதிருக்க நான் குடிப்ப தையே விட்டு விடுகிறேன். நீ உன் லாந்தலைப் பெற்றுக் கொண்டு கிளிக் கூண்டைக் கொடுத் தனுப்பு'' என்று இருந்தது.





# மாமன்னர் அசோகர்

**10**

(பிந்துசாரனின் மகன்களில் இருவர் மட்டுமே முக்கியமானவர்களாகக் கருதப்பட்டனர். ஒருவன் பட்டத்து ராணி மகன் சுசிம்மன். மற்றவன் மன்னன் மணந்த அந்தண ஸ்திரீக்குப் பிறந்த அசோகன். சுசிம்மன் கொடியவன். சுயநலம் கொண்டவன். அசோகன் திறமையும் துணிச்சலும் மிக்கவன். சுசிம்மன் தட்சசீலத்திற்கும் அசோகன் உஜ்ஜயினிக்கும் அனுப்பப்பட்டனர். மன்னன் நோயுற்று மோச நிலையை அடையவே இருவரும் உடனே வரவேண்டுமெனத் தகவல் அனுப்பப்பட்டது. அப்போது—)

அசோகன் வேட்டையாடிவிட்டுக் களைத்துப் போய்த் திரும்பி வந்தான். அவன் உற்சாகத்துடன் ''விதிஷா! இன்று ஒரு புலியையும் ஒரு சிறுத்தையையும் கொன்றேன்'' என்றான். விதிஷாவோ ''இப்படி உயிரினங்களை ஏன் கொல்கிறீர்கள்?'' என்று கேட்கவே அவனும் ''இது எனக்குப் பொழுது போக்கு. அவற்றை நான் என் உணவிற்காகக் கொல்லவில்லை. பல சிறு பிராணிகளின் உயிர்களைக் காக்கவே கொன்றேன்'' என்றான்.

விதிஷாவோ ''புலிகளும் சிறுத்தைகளும் பொழுது போக்கிற்காகச் சிறு பிராணிகளைக் கொல்வதில்லை. அவை தாம் உயிர் வாழவே அவற்றைக் கொல்கின்றன. அவற்றிற்கு எது நல்லது, எது கெட்டது என்று யோசிக்கும் சக்தி கிடையாது. மனிதர்களுக்கு அச்சக்தி உண்டு. வேடிக்கையாகவும் பொழுதைப் போக்கவும் உயிரினங்களை நாம் கொல்வது மிகவும் தவ



றான செயலாகும்'' என்றாள்.

அப்போது விதிஷாவின் பணிப் பெண் அங்கு வந்து அவர்களை வணங்கி ''பிரபுவே! காசி சோதிடர் வந்து காத்துக் கொண்டிருக்கிறார்'' என அசோகனிடம் கூறினாள். அது கேட்டு விதிஷா வியப்புடன் ''சோதி டரா? எதற்கு?'' என்று அசோகனைப் பார்த்துக் கேட்டாள். அசோகனும் ''நேற்று இவ்வூர் பிரபல வியாபாரி லலிததத்தர்என்னிடம்காசியிலிருந்து புகழ்பெற்ற சோதிடர்வந்திருக்கிறார் என்றும்அவர்எதிர்காலத்தில் நடக்கப் போவதை இதுவரை பலருக்குக் கூறி யதெல்லாம் அப்படியே நடந்திருப்ப தாகவும் கூறியதால் அச்சோதிடரை அழைத்து வரும்படிக்கூறினேன். இப் போது லலிததத்தர் அவரை அழைத்து வந்திருக்கிறார்'' எனக் கூறி அவர்க ளைக் காண அங்கிருந்து சென்றான்.

அசோகனைக் கண்டதும் லலிதத்த ரும் சோதிடரும் எழுந்து வணங்கி னார்கள். சோதிடரின் நெற்றியில் பெரிய குங்குமம்பொட்டு இருந்தது. கழுத்தில் ருத்திராட்ச மாலை தொங் கியது. அவர் அசோகனிடம் அவனது வலது கையை நீட்டச்சொல்லி அதைப் பார்த்தார். பிறகு அவர் ''இள வரசே! உங்களுக்கு நல்ல காலம் பிறந்துவிட் டது. நீங்கள்அரசராகப் போகிறீர்கள்'' என்றார்.

அசோகனும் ''அது எப்படி? என் தந்தை பிந்துசாரர் மன்னராக இருக்கி றார். நான் அவரது பிரதிநிதியாகத் தான் இங்கே இருக்கிறேன்'' என்றான். சோதிடரும் ''அதனால் என்ன? நீங் கள்அவந்தியைச் சுதந்திர நாடு என அறிவித்து இதன் மன்னராக ஆகிவிட லாமே'' என்றார். அசோகனோ ''இது என் தந்தையை எதிர்த்துப் போர் கொடி தூக்கும் துரோகச்செயலாகும்'' என்றான்.

சோதிடரும் ''ஆமாம். நீங்கள் இப் படித்தான் செய்வீர்களென்று உங்கள் ஜாதகம்கூறுகிறது. உங்கள்தந்தையோ படுத்த படுக்கையாகக் கிடக்கிறார். அவரது உயிர் ஊசலாடிக்கொண்டிருக் கிறது. அவரும் தமக்குப் பின் மகத மன்னனாக சுசிம்மன்தான் வர வேண் டுமெனத் தம் முடிவைக் கூறிவிட் டார். அதனால் நீங்கள்அவந்தியைச் சுதந்திர நாடு என அறிவிப்பதில் எவ்விதத்தவறும் இல்லை.'' என்றார்.

அசோகனும் ''என் தந்தையின் உயிர்ஊசலாடிக்கொண்டிருக்கிறதா?'' எனக் கேட்கவே சோதிடரும் ''ஆம். ஆனால் நீங்கள் இப்போது பாடலி

புத்திரத்திற்கு செல்லக் கூடாது. இப்போது நீங்கள் போவது உங்களுக்கு ஆபத்து என்று உங்கள் ஜாதகம் கூறுகிறது. இன்னும் ஒரு வருட காலத்திற்கு நீங்கள் உஜ்ஜயினியை விட்டுப் போகாதிருப்பதுதான் உங்களுக்கு நல்லது'' என்றார்.

இந்த சமயத்தில் திடுதிப்பென்று யசன் அந்த அறைக்குள் நுழைந்தான். அசோகன் யசனைக் கண்டதும் மகிழ்ச்சியுடன் ''வா வா. எப்போது பாடலி புத்திரத்திலிருந்து திரும்பி வந்தாய்?'' என்று கேட்டான். அப்போது சோதிடர் ''அப்படியானால் நான் விடை பெற்றுக் கொள்கிறேன். நீங்கள் பேசிக் கொண்டிருக்க விரும்புவீர்கள்'' என்று கூறி அங்கிருந்து போகத் தொடங்கினார்.



யசனோ அவரைப் போக விடாமல் வழி மறித்ததோடு தன் வாளை உருவிக் கொண்டு ''ஏய்! நீயா சோதிடன்? நீ யாரென்று எனக்கா தெரியாது? நீ சூரசேனன். உன்னை சுசிம்மனின் சகோதரர்கள் இங்கே அனுப்பி அசோகரைப் பாடலிபுத்திரத்திற்குப் புறப்பட்டுவிடாமல் செய்யச் சொல்லி இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். சொல் உண்மையை. இல்லாவிட்டால் இந்த வாளுக்கு நீ இரையாவாய்'' என்று மிரட்டினான்.

சோதிடரின் கைகால்கள் நடுநடுங்கின. அவன் சடாலென அசோகனின் கால்களில் விழுந்து ''இவர் கூறுவது உண்மை. என்னை மன்னித்துவிடுங்கள்'' என்று கெஞ்சினார். யசனோ ''மன்னிப்பா? கிடையாது. இந்த சதிகாரனுக்கும் இவனுக்கு உடந்தையா உள்ள இந்த லலிததத்தனுக்கும் சிறை தண்டனைதான் ஏற்றது. என்ன, நான் சொன்னபடி செய்ய வேண்டியதுதானே?'' என்று அசோகனைப் பார்த்துக் கேட்கவே அசோகனும் அவ்வாறே செய்யும்படிக் கூறிவிட்டார். யசன் உடனே இரு வீரர்களை அழைத்து அவ்விருவரையும் சிறைச்சாலைக்குக் கொண்டு போகும்படிக் கூறவே, அவர்களும் அவ்விருவரையும் இழுத்துச் சென்றனர்.

யசனும் ''உங்களைப் பாடலிபுத்திரத்திற்கு இப்போது வரவிடாமல் செய்து உங்களைத் தடுத்து இங்கேயே இருந்துவிடச் செய்யும் சூழ்ச்சி இது. மன்னர் இறக்கும்போது நீங்கள் பாடலிபுத்திரத்தில் இல்லாமலிருந்தால் சுசிம்மனை எளிதில் மகத மன்னனாக்கி விடலாமென்பது சுசிம்மனின் சகோதரர்கள் போட்ட சதித் திட்டம்



தான் இது. அதற்காக ஒற்றனை சோதிடன் போல அனுப்பி உங்களிடம் அவந்தியை சுதந்திர நாடு என அறிவிக்கக்கூறும்படி சொல்லி இருக்கிறார்கள்.'' என்றான்.

அதன் பிறகு பாடலிபுத்திரத்தில் நடந்ததை எல்லாம் விவரமாகக் கூறி அவனது தந்தையையும் தாயையும் சந்தித்ததையும், தந்தை படுத்த படுக்கையாக இருப்பதையும், அசோகனிடம் கூறினான். பிறகு அவன் ''இப்போது நீங்கள் பாடலி புத்திரத்திற்குக் கிளம்பி விரைவில் அங்கு போய் சேர வேண்டும். முதலமைச்சரும் சேனாதிபதியும் மற்றும் பல சிற்றரசர்களும் சுசிம்மன் மகதத்தின் மன்னனாவதை விரும்பவில்லை. ஓரிருவர் தாம் சுயநலத்திற்காக அவனை ஆதரிக்கிறார்கள். அதனால் யார் முதலில் பாடலிபுத்திரத்திற்குப் போய்ச் சேர்கிறார்களோ அவருக்குத்தான் மன்னனாகும் வாய்ப்பு அதிகமாக உள்ளது'' என்றான்.

அசோகன் அது பற்றி யோசிக்கையில் விதிஷா, அங்கு வந்தாள். அவள் யசனைப் பார்த்ததும் ''ஓ! நீ வந்துவிட்டாயா? என்னைப் பார்க்க நேரே வராமல் இங்கே இருக்கிறாயே. இவரைப் பார்க்க பாடலிபுத்திரத்திலிருந்து இருவர் வேறு வந்திருக்கிறார்கள்' என்றாள். யசனும் ''அவர்கள் வருவார்கள் என்றும் அவர்கள் என்ன செய்தி கொண்டு வந்திருப்பார்கள் என்பதும் எனக்குத் தெரியும். அவர்களை முதலமைச்சர் அனுப்பியுள்ளார். அசோகர் உடனே பாடலிபுத்திரத்திற்கு வந்து சேரவேண்டும் என்பதுதான் அச்செய்தி. இது போன்ற செய்தியை தட்சசீலத்திலுள்ள சுசிம்மனுக்கும் அனுப்பி இருப்பார்கள்'' என்றான்.

அது கேட்டு விதுஷாதேவி ''இப்போதே இவர் பாடலிபுத்திரத்திற்குப் போக வேண்டுமா?'' என்று கேட்க யசனும் ''ஆமாம் அவர் போய்த்தானாக வேண்டும்'' என்றான். அப்போது அவள் ''அப்படியானால் அதற்கான காரணம் உனக்குத் தெரிந்திருக்குமென நினைக்கிறேன்'' என்றாள்.

யசனும் ''ஒரு தந்தை மரணப் படுக்கையில் இருக்கையில் அவரருகே அவரது மகன் இருக்க வேண்டியது கடமைதானே. மேலும் சுசிம்மன். அரியாசனத்தில் அமர்ந்து விடாமலிருக்கச் செய்ய இவர் அங்கு போக வேண்டும்'' என்றான். அப்போது விதிஷா ''பட்டத்துக்கு உரியவன் மன்னனின் மூத்த மகன் தானே? அதனை

இவர் தடுப்பது நியாயமா?'' என்று கேட்டாள்.

யசனும் ''மன்னனின் மூத்த மக னுக்குத்தான் அரியணை என்பது சாதா ரண நிலையில் பொருந்தும். ஆனால் சுசிம்மன் விஷயத்தில் இது பொருந் தாது. அவன் கொடியவன். அவனது ஆட்சியில் மக்கள் சுக வாழ்வு வாழ முடியாது. அவன் மட்டும் மகதத்தின் மன்னனாகி விட்டால் சந்திரகுப்தர் நிறுவிய மகதப் பேரரசு விரைவில் சிதைந்து பாழ்பட்டு விடும்'' என் றான்.



இவ்வாறு யசன் விளக்கமாகக் கூறி யதும். அசோகனும் ''சரி. இப்போதே நான் புறப்படுகிறேன்'' என்றான். அப்போது யசன் ''நீங்கள் உங்களுடன் உங்கள் பாதுகாப்பிற்காக இங்குள்ள படையில் பாதியைக் கொண்டு செல் லுங்கள். மீதப் பாதிப் படை இங்கே இருக்கட்டும்'' என்றான். அசோகனும் அவனது யோசனைப் படி நடந்தான்.

தட்சசீலத்தில் சுசிம்மன் மது அருந் தியவாறே கிரேக்கப் பெண் ஒருத்தியு டன் சிரித்துப் பேசி உல்லாசமாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்தான். அது இரவு வேளை. அப்போது திடீ ரென இரு நடன மாதுகள் அவன் முன் வந்து நின்றனர். அவர்கள் வேறு யாரு மல்ல. அசோகனைக் கொல்ல அவன் அனுப்பியவர்கள்தாம். அவர்களிடம் சுசிம்மனின் முத்திரை பதித்த மோதி ரங்கள் இருந்ததால் தங்கு தடை இல்லாமல் சுசிம்மன் இருக்குமிடத் திற்கு செல்ல முடிந்தது.

அவன் அவர்களைக் கண்டதும் ''ஓ! நீங்களா? இதுவரை நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள் என்பது எனக்குத் தெரியாது என்றா நினைக்கி றீர்கள்? நீங்கள் அசோகனைக் கொல்ல முயன்றபோது உங்களை அவனது மனைவி விதிஷாதேவி காத்தால் என்றும் நீங்கள் அவளது பணிப் பெண் களாக இருந்து வந்தீர்கள் என்பதும் எனக்குத் தெரியும். அந்த அசோக னைக் கொல்ல முடியவில்லை என்று என்னிடம் சொல்லத்தானே இப் போது வந்திருக்கிறீர்கள்'' என்று ஏள னமாகச் சிரித்தவாறே கேட்டான்.

அப்போது அவர்களில் ஒருத்தி ''மாட்சிமை பொருந்திய இளவரசே! எங்களால் சட்டென அந்த அசோ கனைக் கொல்ல முடியாமல் போனது என்னவோ உண்மைதான். ஆனால் நீங்கள் எங்களிடம் ஒப்படைத்த வேலையை மறந்து விடவில்லை. நாங்கள் அந்த வேலையைச் செய்து

முடிக்காமல் வந்திருக்கிறோம் என்றா நினைக்கிறீர்கள்? அப்படி இல்லை. நாங்கள் எங்கள் நோக்கத்தைச் செய லாக்க விதிஷா தேவியின் பணிப் பெண்கள் போல நடித்து தக்க சம யத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந் தோம். அது கிடைத்ததும் எங்கள் கை வரிசை யைக் காட்டி விட்டுத்தான் வந்திருக் கிறோம்'' என்றாள்.

அது கேட்டு சுசிம்மன் நிமிர்ந்து உட்கார்ந்து ''அப்படியானால் என்ன தான் செய்துவிட்டு வந்தீர்கள்?'' என்று ஆவலுடன் கேட்டான். அப்போது அந்த இரு நடன மாதர்களும் கிரேக் கப் பெண்ணைப் பார்க்கவே, சுசிம்ம னும் அவளிடம் ''நீ இப்போது போ. நான் இவர்களிடம் ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும். பேசி முடித்த பின் உனக்கு ஆள் அனுப்பு கிறேன். அப்போது நீ வரலாம்'' என்று கூறி அவளை அங்கிருந்து அனுப்பி விட்டான்.

அவள் போனதும் சுசிம்மன் அந்தப் பெண்களிடம் ''சரி. இப்போது சொல் லுங்கள். அவனை என்ன செய்து விட்டு வந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள். அப்போது முன் பேசிய நடன மாது ''சொன்னால் முன்பு நீங் கள் கூறியபடி எங்களுக்கு பெருந் தொகையைப் பரிசாகக் கொடுப்பீர்க ளல்லவா?'' என்று கேட்டாள். அவ னும் ''ஓ! நான் பட்டத்திற்கு வந்ததும் சொன்னதற்கு மேலாக இரு மடங்கு கொடுப்பேன். அதில் சந்தேகமே வேண்டாம். அந்த அசோகனை என்ன செய்தீர்கள்? அதைச் சொல்லுங்கள்'' என்று கேட்டான்.

அவளும் ''நாங்கள் அவன் குடிக்



கும் மதுவில் பயங்கர விஷத்தைக் கலந்துவிட்டோம். அதனால் அவனது நரம்புகள் இழுத்துக் கொள்ள அவன் இப்போது எழுந்திருக்கவும், உட்கார வும், நடக்கவும், கை கால்களை அசைக்கவும் முடியாமல் தவியாய்த் தவிக்கிறான். இனி அவனால் எங்கும் வரமுடியாது. உங்களுக்குப் போட்டி யாக வந்து சிம்மாசனத்தில் அமரவும் முடியாது. அவனைக் கொல்லா விட்டாலும் அவன் நகரக் கூட முடி யாதபடி இருப்பதால் அவனால் உங் களுக்கு எவ்வித கெடுதலையும் செய்ய முடியாது'' என்றாள்.

சுசிம்மனும் ''சபாஷ். இனி கவலை இல்லை'' எனக் கூறியபோது கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. அவ னும் ''உள்ளே வா'' என்று குரல் கொடுத்தான். வந்தது அவனது அந்த

ரங்கப் பணியாள். அவன் சுசிம்மனை வணங்கி ''பிரபுவே! பாடலிபுத்திரத்திலிருந்து இரு தூதுவர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் முதலமைச்சரிடமிருந்தும், தங்கள் தாயாரிடமிருந்தும் கடிதங்களைக் கொண்டு வந்திருக்கிறார்கள். தங்களை நேரில் காணவேண்டுமாம்'' என்றான்.

சுசிம்மனும் ''சரி. அவர்களை இங்கே அனுப்பு'' என்றான். சில நொடிகளில் இருவர் வந்தனர். அவர்களில் ஒருவன் இரு கடிதங்களை அவனிடம் கொடுத்தான். அவன் பிரித்துப் படித்த முதல் கடிதத்தை முதலமைச்சர் எழுதி இருந்தார். அதில் மன்னனின் உடல் நிலை மிகவும் மோசமாகிவிட்டதாயும் அதனால் அவன் உடனே பாடலிபுத்திரத்திற்கு வரவேண்டுமென எழுதப்பட்டிருந்தது. அடுத்த கடிதத்தையும் அவன் பிரித்துப்படித்தான். அதிலும் அவன் உடனே பாடலிபுத்திரத்திற்கு வரவேண்டுமென்றும் அப்படி வராவிட்டால் அசோகன் வந்து சிம்மாசனத்தில் அமர்ந்து விடுவான் எனவும் எச்சரித்து அவனது தாய் எழுதி இருந்தாள்.

சுசிம்மன் அந்த தூதுவர்களைப் போகச் சொல்லிவிட்டு அந்த நடன மாதுக்களிடம் ''என் தாயாருக்கு நீங்கள் அசோகனை என்ன செய்து விட்டு வந்திருக்கிறீர்களென்பது தெரியாது தான், அசோகன் எனக்கு முன்னால் பாடலிபுத்திரத்திற்கு வந்து அரியணையில் அமர்ந்து விடுவானென்று அவள் பயப்படுகிறாள். அவளுக்குத் தெரியுமா அசோகன் கை கால்களை அசைக்க முடியாமல் படுத்த படுக்கையாய்க் கிடக்கிறானென்று. நான் இங்கேயேதான் இருப்பேன். உடனேயே பாடலிபுத்திரத்திற்குப் போகத் தேவை இல்லை. அங்கே இப்போது போனால் எனக்கு நஷ்டம்தான். இங்கே இருந்தால்தான் எனக்கு லாபம். நான் எதிர்பார்க்கிறபடி நாளை ஒரு கிரேக்க வியாபாரி இங்கு வியாபாரம் செய்வதற்கு என் அனுமதியைக் கோர வருகிறான். அவன் எனக்கு விலை உயர்ந்த பெரிய வைரத்தைப் பரிசளிக்கப் போகிறானாம். அதை வாங்கிக் கொண்டு சாவகாசமாகப் பாடலிபுத்திரத்திற்குப் புறப்படுகிறேன்'' என்று சிரித்துக் கொண்டே கூறினான்.

**(தொடரும்)**





# இரு அறிஞர்கள்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தில் ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே இந்த பயங்கர நடுநிசியில் ஏன் இப்படி சிரமப்படுகிறாய்? மன்னனான உனக்கு ஒரு அறிஞர் கூறும் ஒரு விஷ யம் முற்றிலும் சரியாக இருக்கும் என்பது தெரிந்ததே. மன்னர்கள் ஒரு விஷயம் பற்றி சில அறிஞர்களிடம் யோசனை கேட்கிறார்கள். சில சமயங்களில் இப்படிப்பட்ட அறிஞர்களையும் தம் தர்பார்களில் உயர் பதவிகளில் நியமித்துக் கொள்கிறார்கள். ஆனால் இரு அறிஞர்கள் கூறுவது ஒரு விஷயத்தில் ஒன்றுக்கு மற்றது நேர் எதிராக இருக்கும். அப்போது அவற்றில் எது தக்க காரணத்தோடு சரியானது என்று யோசித்துப்

## வேதாளம் சொல்லும் கதை



பார்க்க வேண்டி இருக்கும். இதற்கான திறமை மன்னனிடம் இருக்க வேண்டும். முன் காலத்தில் விஜயவர்மன் என்ற மன்னன் இருந்தான். அவன் பட்ட கஷ்டங்களுக்கு அவனது ராஜ குரு ஒரு காரணத்தைக் கூறினார். அவரது மதியூக மந்திரியோ அதற்கு நேர்மாறானகருத்தைக்கூறினார். இது போல உன் தர்பாரிலும் இரு அறிஞர்களும் இரு மாறுபட்ட கருத்துகளைக் கூறி உன்னை இப்படி ஒரு செயலில் இறங்க வைத்து விட்டார்களா? உனக்கு அந்த விஜயவர்மனின் கதையைக் கூறினால்தான் புரியும். எனவே நான் சொல்வதை கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

ஒருமுறை விதர்ப்ப நாட்டை விஜயவர்மன் என்ற மன்னன், ஆண்டு கொண்டிருந்தான். அவன் வில்லுக்கு விஜயன் என்ற சொல் வழக்கப்படி தான் அர்ஜுனனைப் போல காண்டீபம் போன்ற ஒரு வில்லைத் தயாரித்து அதைத் தன்னோடு எங்கும் எடுத்துச் செல்ல விரும்பினான். அதனால் தன் மந்திரியை அழைத்து ''அமைச்சரே! உலகில் யாரிடமும் இல்லாததுமாயும் காண்டீபத்திற்கு இணையானதுமான பெரிய கனமான ஒரு வில்லைச்செய்ய ஏற்பாடு செய்யுங்கள். யார் அதைப் பார்த்தாலும் அது அர்ஜுனனின் காண்டீபமோ அல்லது ஸ்ரீராமரின் கோதண்டமோ என வியந்து கூறும்படி இருக்க வேண்டும்'' என்று அவன் கூறினான்.

மன்னன் கூறியது போலவே மந்திரி ஒரு வில்லைச் செய்ய தக்க ஆட்களைத் தேர்ந்தெடுத்தார். அவர்களும் தனுர் சாஸ்திர அமைப்பின்படி ஒரு பெரிய வில்லைத் தயாரித்துக் கொடுத்து விட்டனர். அந்த வில்லைப் பார்த்தவர்களெல்லாம் அது அர்ஜுனனின் காண்டீபம் போல உள்ளது என்றும் அம்மாதிரியான வில் உலகில் வேறு யாரிடமும் இல்லை என்றும் புகழ்ந்து கூறினார்கள்.

விஜயவர்மனும் அந்த வில்லை பார்த்து பூரித்துப் போனான். அந்த வில்தன்னிடம் இருப்பது பெருமைக்குரியது என்றும் அது தனக்கு அதிர்ஷ்டத்தையும் வெற்றிகளையும் அளிக்கப் போகிறது என்றும் எண்ணி மகிழ்ந்து போனான்.

ஒரு நல்ல நாளில் விஜயவர்மன் அந்த வில்லில் நாண் ஏற்றினான். அங்கு அச்சமயத்தில் கூடியிருந்த அனைவரும் அவன் அர்ஜுனன் போலச்சிறந்த வில்லாளி எனப்பெயர்

பெற்று புகழுடன் விளங்க வேண்டு மென்று வாழ்த்தினார்கள். அவனும் அந்த வில்லை எடுத்துக் கொண்டு ஒரு நாள் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். அப்போது அந்த வில் ஒரு மரக் கிளையில் பட்டு உராய்ந்து சற்று விரிசல் விட்டு விட்டது. அவன் வேட்டையிலிருந்து அரண்மனைக் குத் திரும்பி வந்ததும் கை தேர்ந்த வேலைக்காரர்களைக் கொண்டு வில்லின் விரிசல் தெரியாதபடி செய் தான்.

இதைத் தனக்கு வில்வித்தை கற்றுக் கொடுத்த ராஜகுருவிடம் கூறினான். அவரும் அந்த வில்லை ஒரு ஈர்க்குச்சி கொண்டு அளந்தார். பிறகு ஒரு சக்கரம் வரைந்து அதில் ஒரு தாமரைப் பூவின் வடிவத்தையும் கீறி அந்த ஈர்க்குச் சியை சிறு சிறு துண்டுகளாக ஒடித்து அந்தத் தாமரைப் பூவின் இதழ்களில் வைத்து சற்று நேரம் கண்ணை மூடிக் கொண்டு யோசித்தார்.

பிறகு அவர் கண்களைத் திறந்து சற்றுக் கவலைப் பட்டவாறே ''மன் னனே! தனுர் சாஸ்திரப் பிரகாரம் என் குருநாதர் அதர்வணர் கூறியபடிய பார்த்தால் இந்த வில்லிற்கு ஒரு தோஷம் உள்ளது. நன்றாக இருந்த வில்லில் ஒரு சிறு விரிசல் ஏற்பட்டு விட்டதால் அதற்கு தோஷம் தாக்கி விட்டது. என்னதான் விரிசலைச் சரி செய்தாலும். அதனைத் தாக்கிய தோஷம் அதில் இருக்கத்தான் இருக் கிறது. அதனால் நீ இதனை எடுத்துக் கொண்டு சென்றால் உனக்குக் கஷ்டங் கள்தான் வந்து கொண்டே இருக்கும்'' என்றார்.

ராஜகுரு இவ்வாறு சொன்ன போதி லும் மன்னனுக்கு அந்த வில் இல்லா மல் எங்கும் போக விருப்பமில்லை. அதனால் அதனை அவன் தன்னோடு வைத்துக் கொண்டு இருந்தான். இச் சமயத்தில் அண்டை நாட்டு மன்னன் விதர்ப்ப நாட்டின் மீது படையெடுத்து





கண்டு ஓடிப் போய்த் தம தலைவனை அழைத்து வந்தார்கள். அத்தலைவனும் மன்னனைக் கண்டு ''அரசே! நம் நாட்டின் மீது அண்டை நாட்டு மன்னன் படை எடுத்து வந்திருப்பதாக அறிந்தோம். உங்களைப் பார்த்தால் இப்போது போர்க்களத்திலிருந்து ஓடி வந்து விட்டவர் போல் தெரிகிறது. எதிரிகளின் கை ஓங்கி விட்டதா? கவலைப்படாதீர்கள். நாங்கள் உங்களுக்கு உதவி புரிகிறோம். கொஞ்ச காலத்திற்கு இங்கேயே இருங்கள். நாங்கள் எங்கள் படையைத் திரட்டி வருகிறோம். பிறகு அண்டை நாட்டு மன்னனை விரட்டி விட்டு நம் நாட்டைத் திரும்ப அடைவோம்'' என்று கூறினான்.

இதற்குப் பின் மலைச்சாதியினர் போருக்கான ஆயுதங்களைச் செய்தனர். ஆண்களும் பெண்களும் ஈட்டிகளையும் வில் அம்புகளையும் எடுத்து வைத்துக்கொண்டு தயாராக நின்றனர். இதைக்கண்ட விஜயவர்மன் மகிழ்ந்து போனான். அப்போது அவன் ''உங்கள் வில் மிகச் சிறியது. இதைக் கொண்டு போர் புரிந்தால் வெற்றி பெற முடியுமா? போர்புரிய ஆயுதங்கள் பெரிதாக இருக்க வேண்டும். என் வில் எவ்வளவு பெரியது என்று பாருங்கள்'' எனக் கூறி இலேசாகச் சிரித்தான்.

வந்தான். அவனுடன் போர் புரிய விஜயவர்மன் தன் வில்லையே எடுத்துச் சென்றான். ராஜகுருவும் அவன் போருக்கும் போகுமுன் அவனிடம் ''நீ அந்த தோஷம் பிடித்த வில்லை எடுத்துச் செல்லாதே. அதனால் உனக்குகஷ்டமே ஏற்படும்'' என்றார். ஆனால் அவர் கூறியதைக் கேளாமல் அவன் தன் வில்லை எடுத்துக் கொண்டே சென்றான். போரில் விஜயவர்மன் தோற்றுப் போய்ப் போர்க்களத்திலிருந்து ஓடிப் போய் விட்டான்.

அவன் காட்டிற்குள் வெகு தூரம் சென்று விட்டான். அங்கு அவன் மலைச்சாதியினர் வசிக்கும் பகுதியை அடைந்தான். ஒரு மரத்தடியே அவன் கவலையுடன் உட்கார்ந்திருந்த போது மலைச் சாதியினர் சிலர் அவனைக்

அதைக் கேட்ட மலைச் சாதியினர் தலைவன் ''அரசே! உங்களைப் போல குதிரை அல்லது ரதத்தில் அமர்ந்து போர் புரிபவர்களுக்கு உங்களிடம் உள்ளது போன்ற வில் ஏற்றது. ஆனால் தரையில் நின்று போர் புரியும் எங்களுக்கு எங்கள் சிறிய வில்தான் சரிப்

பட்டு வரும்'' என்று கூறினான். அப்போது விஜயவர்மனுக்கு ராஜ குரு அந்தப் பெரிய வில்லில் தோஷம் இருப்பதாகக் கூறியது நினைவிற்கு வந்தது.

ஒரு வாரம் கழிந்தது. அண்டை நாட்டு மன்னன் மலைக் காட்டிற்குள் தன் படைகளோடு வந்து மலைச்சாதியினரைத் தாக்கலானான். அந்தப் பெரும் படையை மலைச் சாதியினரின் சிறிய படையால் எதிர்க்க முடியாதே என்று எண்ணி விஜயவர்மன் தன் வில்லோடு அங்கிருந்து ஓடிப் போனான். காட்டில் வெகுதூரம் சென்ற பின் மலைச் சரிவில் ஒரு கிராமத்து எல்லையில் ஒரு பாழடைந்த கோவிலை அவன் கண்டு அதில் தங்கி இளைப்பாறினான்.

அப்போது அவனுக்கு நல்ல பசி அதனால் அங்கு பறக்கும் புறாக்களில் ஒன்றைப் பிடிக்கத்தன் மேல் துண்டை வீசி எறிந்தான். ஆனால் புறாக்கள் அந்தத் துண்டைப் பற்றிக் கொண்டு பறந்து போய் விட்டன. அப்போது அவன் மனதில் ''ராஜகுரு சொன்னது சரிதானோ? இந்த வில்லில் தோஷம் உள்ளதோ? அதனால்தான் நாட்டை விட்டு ஓடி போரில் வெற்றி பெற முடியாது அலைகிறேனோ? இப்போது என் மேல் துண்டு கூடப் போய் விட்டதே என்று எண்ணி இதெல்லாம் தன் வில்லின் தோஷத்தால் நடக்கிறது என்று எண்ணி ஆத்திரம் கொண்டு ஒரு அம்பை வில்லில் வைத்து எதிரே இருந்த ஒரு பெரிய பாறை மீது எய்து விட்டுத் தன் வில்லைத் துண்டு துண்டாக ஒடித்துப் போட்டான்.

அதன் பிறகே அவன்தான் அம்பால்



அடித்த பாறையைப் பார்த்தான். அது பொடிப் பொடியாகிக் கிடந்தது. அதன் கீழ் ஏற்பட்ட பள்ளத்தில் அவன் ஒரு நில மாளிகையைக் கண்டான். அதைக் கண்டு அவன் அதற்குள் சென்றான். அதில் நான்கு பெட்டிகள் இருப்பதைப் பார்த்து அவன் அவற்றைத் திறந்து பார்த்தான். அவற்றில் பொன்னும் நவரத்தினங்களும் நிறைந்து இருந்தன. அதைக் கண்ட அவனது மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லாது போயிற்று.

இதற்குள் மலைச்சாதியினர் தலைவன் விஜயவர்மனைத் தேடிக் கொண்டு அந்தப் பாழடைந்த கோவிலுக்கு வந்தான். அவன் விஜயவர்மனைக் கண்டதும் ''அரசே! எங்களது காட்டுப் போர் முறையால் அண்டை நாட்டு மன்னனின் படைகளைத்

தோற்கடித்து அந்த மன்னனையும் சிறைப் பிடித்து விட்டோம்'' என்றான். விஜயவர்மனும் அவனைப் பாராட்டி அங்கிருந்த நான்கு பெட்டிகளையும் அவனது ஆட்களைத் தூக்கி வரச்சொன்னான். எல்லோரும் தலை நகரை அடைந்தார்கள்.

அரண்மனை வாசலில் மந்திரியும் ராஜ குருவும் இருந்தனர். விஜயவர்மன் கொண்டு வந்த அளவற்ற செல்வத்தைக் கண்டு மந்திரி அது பற்றி விசாரிக்கவே மன்னனும் அது தனக்குக் கிடைத்த விவரத்தைக் கூறினான். மந்திரியும் ''உங்கள முன்னோர்கள் இவற்றை அந்தக் கோவிலுள் புதைத்து வைத்தார்கள்.அது இப்போது உங்களுக்கு உங்கள் வில்லின் காரணமாகத் தான் கிடைத்துள்ளது' என்றார்.

ராஜகுருவோ ''உன் வில்லை ஒடித்துப் போட்ட பிறகுதான் உனக்கு இவை கிடைத்தன. தோஷமுள்ளவில் அழிந்தது. அது உன்னை விட்டுப் போனதால் உன் கஷ்டங்களும் விலகி அதிர்ஷ்டமும் வந்தது'' என்றார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மந்திரி என்னவோ வில்லின் காரணமாகத்தான் மன்னனுக்கு அளவற்ற செல்வம் கிடைத்ததாகக் கூறினார். ராஜ குருவோ தோஷமுள்ள வில் அழிந்து போனதால்தான் விஜயவர்மனுக்கு அதிர்ஷ்டம் வந்தது என்றார். இவர்கள் இருவரில் யார் கூறுவது சரி? இக்கேள்விக்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''மந்திரி சொன்னதே சரி. விஜயவர்மனின் வில்லிலிருந்து கிளம்பிய அம்பு பாறை மீது பட்டுத் தான் அது பொடிப் பொடியாய்ப் போய் நிலத்தடியே இருந்த மாளிகையையும் அதிலிருந்த திரண்ட செல்வத்தை யும் வெளிப்படுத்தியது. அம்பை எய்த பிறகுதான் விஜயவர்மன் தன் வில்லைத் துண்டு துண்டாக ஒடித்துப் போட்டான். வில்லிருந்து கிளம்பிய அம்பால் விஜயவர்மன் பெரும் செல்வத்தை அடைந்ததால் மந்திரி கூறியதே சரி'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# சகோதர பாசம்

விநாயகமும் வேலனும் அண்ணன் தம்பிகள். தம் பெற்றோர் இறந்த பிறகும் ஒற்றுமையுடன் ஒரே குடும்பமாக வாழ்ந்தனர். இந்த ஒற்றுமை ஒரு வருட காலமே இருந்தது. அவர்களது மனைவிகள் சச்சரவிட்டுக் கொண்டதால் அவர்கள் தம் தகப்பனார் விட்டுப் போன வயல்களை சமமாகப் பிரித்துக் கொண்டு தனித் தனி குடும்பங்களாக வாழ வேண்டி வந்தது. ஆனாலும் சகோதரர்கள் ஒருவர் மீது மற்றவர் கொண்டிருந்த அன்பு மட்டும் குறையவில்லை.

விநாயகத்திற்குக் குழந்தையே பிறக்கவில்லை. வேலனுக்கோ ஐந்து குழந்தைகள். விநாயகத்திற்கு உதவி புரிய மகனோ மகளோ இல்லையே என எண்ணி வேலன் வருந்தினான். விநாயகமோ வேலன் பெரிய குடும்பத்தைக் காப்பாற்ற மிகவும் சிரமப் பட வேண்டி இருக்கிறதே என்று கவலைப்படலானான். சகோதரர் இருவரும் தம் வயல்களில் வேலை செய்யும்போது அளவளாவியும் சில சமயங்களில் ஒருவன் தன் வயலில் இல்லாதபோது மற்றவன் அதையும் காவல்காப்பதுமாக இருந்து வந்தனர்.

ஒரு வருடம் இருவர் நிலங்களிலும் நல்ல விளைச்சல் கண்டது. இருவரும் தம் வயல்களில் விளைந்த நெல் பயிரை அறுவடை செய்து போரடித்துத் தம் வயல்களில் குவியலாகக் குவித்தனர். இரு குவியல்களும் சமமாக இருந்தன. அன்று இருட்டி விட்டதால் மறுநாள் நெல்லைத் தம் வீடுகளுக்கு எடுத்துச் செல்வது என்றும் அன்றிரவு நெல்லுக்குக் காவலாகப் படுத்துக் கொண்டிருப்பது என்றும் அச் சகோதரரர்கள் தீர்மானித்தனர்.

இரவு சாப்பாட்டு வேளை வந்ததும் விநாயகம் தன் தம்பியிடம் ''வேலா! என் நெல்லையும் கொஞ்சம் காவல் காத்திரு. நான் போய் சாப்பிட்டு வருகிறேன். அதற்குப் பிறகு நீ

—எஸ். சுதா—

சாப்பிட்டு வரலாம்'' என்றான். வேல னும் அப்படியே செய்யலாம்'' எனவே விநாயகம் தன் வீட்டிற்குச் சாப்பிடச் சென்றான். அப்போது வேலன் தன் மனதில் ''அண்ணனுக்கு உதவ யாரும் இல்லை. இப்போதி ருந்தே அவர் பணம் சேர்த்து வந்தால் தான் தள்ளாத காலத்தில் அவர் கஷ்டப் படாமல் இருக்க முடியும். எனக்கோ மூன்று மகன்கள் இருக்கிறார்கள். அவர்கள் சம்பாதித்து என்னை வயது காலத்தில் காப்பார்கள்'' என்று எண்ணி உடனே தன் தானியக் குவிய லிலிருந்து பத்து கூடை நெல்லைத் தன் அண்ணனின் நெற் குவியலில் சேர்த்து விட்டு வந்தான்.

விநாயகம் சாப்பிட்டுவிட்டு வந் ததும் ''வேலா, நீ போய் சாப்பிட்டு விட்டு வா'' எனக் கூறி அவனை அனுப்பினான். அவன் போனதும் விநாயகம் தன் மனதில் ''என் தம்பி யின் குடும்பம் பெரியது. எனக்கு எதற்கு இவ்வளவு நெல்? நெல்லிலி ருந்து பத்து கூடை நெல்லை அவன் குவியலில் சேர்த்து விடுகிறேன். அவ னும் அவனது மக்களும் நன்கு சாப் பிடட்டும் என எண்ணி பத்துக் கூடை நெல்லைத் தன் தம்பியின் நெற் குவிய லில் சேர்த்து விட்டுத் தன் வயலுக்கு வந்து விட்டான்.

இதற்குச் சற்று நேரத்திற்குப் பின் வேலன் சாப்பிட்டுவிட்டுத் தன் வய லுக்கு வந்தான். இருவரும் இரவில் தம் வயல்களில் தூங்கி மறுநாள் காலையில் எழுந்து தம் நெற்குவியல் களைப் பார்த்து ஆச்சரியப்பட்டனர். ஏனெனில் அவர்கள் எதிரபார்த்தபடி அவை குறைந்திருக்கவில்லை அப் போது வேலன் ''என்ன ஆச்சரியம் அண்ணா! நேற்றிரவு உங்கள் குவி யலில் என் நெல்லில் பத்து கூடையை சேர்த்தேனே, நீங்கள் கஷ்டப்படக் கூடாதென எண்ணி நான் உங்கள் குவி யலில் சேர்த்த நெல் எப்படி என் வயலுக்கே வந்தது?'' எனக் கேட் டான்.

விநாயகமும் ''தம்பி! உன் குடும் பம் பெரிதானதால் உனக்கு அதிக நெல் தேவைப்படுமென்று நான்தான் உன் குவியலில் சேர்த்தேன்'' என்றான். இது கேட்டு வேலன் தன் அண்ணனின் அன்பை எண்ணிக் கண்ணில் நீர்த தேங்க தன் அண்ணனைக் கட்டித் தழு விக் கொண்டான்.



# மேற்கு வங்காளம்

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




ஆலயங்கள் நிரம்பிய ஒரிஸ்ஸா மாநிலத்திலிருந்து புறப்பட்டு கவிஞர்களுக்கும் சாதுக்களுக்கும் பெயர் பெற்ற மேற்கு வங்காளத்தை நாம் அடைகிறோம். மிட்னபூர் மாவட்டத்தை அடுத்து ஒட்டியுள்ள கடற்கரைப் பகுதியை காந்தி கடற்கரை என்கிறார்கள். மேற்கு வங்கத்தின் இரண்டாவது பெரிய மாவட்டம் மிட்னபூர். இது ஹோர்க்ளா என்ற கோரையால் பின்னப்பட்ட பாய்களுக்குப் பெயர் பெற்றது. மிகச் செழிப்பான இம் மாவட்டத்தில் நெல், வாழை, மா, பலா, தென்னை முதலியன அமோகமாக விளைகின்றன.

காந்தி கடற்கரைப் பகுதியில் புகழ் பெற்ற இடம் திகா. எட்டு கிலோ மீட்டருக்கு மணலால் பரந்திருக்கும் இக் கடற்கரை பார்க்க அழகானது. ஆங்கிலேயர் இதனை 'பீர் கூல்' என்ற பெயரில் அறிவார்கள். இந்தியாவின் முதலாவது கவர்னர் ஜெனரல் வாரன் ஹேஸ்டிங்ஸ் இதைக் கிழக்கத்திய பிரைட்டன் என்று குறிப்பிட்டுள்ளார்.

இங்கு கடல் அதிக ஆழமில்லை. கடலின் ஒன்றரை கிலோ மீட்டர் வரை ஆழம் மிகக் குறைவே. அலை அடிப்பது குறைந்திருக்கையில் இந்த ஆழமற்ற கடல் பகுதியில் காரைக் கூடச் செலுத்தலாம். இங்குள்ள மணல் பகுதி தளர்ந்தில்லாமல் கெட்டியாக உள்ளதால் ஒரு ஆகாய விமானம் கூட இங்கு எளிதாக இறங்கலாம்.

காந்தி கடற்கரை முடிவில் ஹுக்ளி என்ற பெயருள்ள கங்கை நதிகடலில் கலக்கிறது. இந்த அகண்ட ஆழமான நதியில் நீண்ட காலமாகவே கப்பல் போக்குவரத்து தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது.



தீகா கடற்கரை



சுதநுதியின் போய்டக்-கானா

தாம்லக் என்ற தற்போதைய துறைமுகம் ஆறாவது ஐந்தாவது நூற்றாண்டில் தாமிர லிப்தி என்ற பெயரில் முக்கிய துறைமுகமாக இருந்தது. போதி மரக் கிளையை ஸ்ரீலங்காவிற்கு எடுத்துச் செல்லும் கப்பலை வழியனுப்ப அசோக சக்கரவர்த்தியே தாமிலிப்திக்கு வந்திருந்தாராம்.

ஹுக்ளி கரையில் அத்நுதி என்ற பாழடைந்த கிராமம் உள்ளது. ஹுக்ளி நதியில் மணல் தங்கி மேடாவதால் வியாபாரிகள் இங்கு கூடி வியாபாரம் செய்து வந்தார்கள். இங்கு பெரிய அரச மரத்தடியே அமர்ந்து வியாபாரப் பேச்சுகளை நடத்தினாரகளாம். இதற்கு போய்டக் கானா என்று பெயராம் ஆகஸ்ட் 1690ல் ஒரு ஞாயிறன்று கிழக்கிந்தியக் கம்பெனியில் ஏஜண்ட் ஜாப் சார்மோக் இங்கு வந்து இது பண்டக சாலை அமைக்க ஏற்ற இடம் எனத் தேர்ந்தெடுத்தானாம். ஆனால் 1820ல் இந்த மரம் வாரன் ஹேஸ்டிங்க்ஸால் வெட்டப்பட்டது.

சார் மோக்தான் சுதநுதி,கோவிந்தபூர், காளீகட்டா ஆகிய மூன்று கிராமங்களைச் சேர்த்து கல்கத்தாவை உருவாக்கினான். இப்பகுதிகளை முகலாய மன்னன் ஔரங்கஜீப்பிடமிருந்து குத்தகைக்குப் பெற்றான். இங்கு இவன் முதலாவது வங்க கவர்னராகத் தன் இந்திய மனைவியுடன் வாழ்ந்தான். இவன் கல்கத்தாவில் இறக்க, இவனது உடல் செண்ட் ஜான் சர்ச்சில் அடக்கம் செய்யப்பட்டது.

காளிகட்டா என்பதுதான் கல்கத்தா என உச்சரிக்கப்படுகிறது. பல துறைமுகங்களில் கல்கத்தா ஒன்றுதான் நதிக்கரை துறைமுகம் இது கடலிலிருந்து 23 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. அடிக்கடி இது ஆழப்படுத்த வேண்டியுள்ளது. கப்பல்கள் கடலிலிருந்து இதற்கு வழி நடத்தப்படுகின்றன. தினமும் இங்கு ஆழப்படுத்தப்பட்டு கப்பல்கள் அழைத்துச் செல்லப்படுகின்றன.



செண்ட்ஜான் சர்ச்சில் ஜாப் சார்மோக்கின் நினைவகம்

கல்கத்தாவில் ஆற்றின் கடைசியில் 1977ல் ஹால்டியா துறைமுகம் இயங்கத் தொடங்கியது. இது கல்கத்தா துறைமுகத்தின் பிரச்னைகளைத் தீர்த்தது. உலகில் மிகப் பெரிய துறையைக் கொண்டது ஹால்டியா துறைமுகம்.


ரவீந்திர சேது என்ற பாலம்

1943வரை கல்கத்தா மிதக்கும் பாலத்தால் ஹௌரா என்ற இடத்தோடு இணைக்கப்பட்டிருந்தது. போக்குவரத்து அதிகமாகவே இது ரவீந்திர சேது என்ற பெயரிடப்பட்டு இதன் மீது எட்டு வழிப்பாதை அமைக்கப்பட்டது. இது ஒரு பக்கம் உறுதியாய் மறு பக்கம் நெம்பு கோலால் தூக்கப்படுவது போல அமைந்த அதிசயப்பாலம். இதன் நீளம் 475 மீட்டர்.

ஹௌராவின் சிப்பூரிலுள்ள 'தாவரப் பூங்கா 1765 அமைக்கப்பட்டது. இங்குள்ள ஆலமரம் 24.4 மீ உயரமானது. 365 மீட்டருக்குப் பரவியுள்ளது. இதன் அடி மரம் அரிக்கப்பட்டிருந்தாலும் அதன் ஆயிரத்திற்கும் மேற்பட்ட வேர்களை மிக நல்ல நிலையிலேயே உள்ளன. இப்பூங்காவில் 12,000 அதிசயத் தாவரங்கள் உள்ளன. அமேஜர்னின் பெரிய அல்லி, மொலுகஸின் புதிய வகை மரம், மேற்கு ஆப்பிரிக்காவில் பாமாலின் மரங்கள், 40 வருடத்திற்கு ஒரு முறை மலரும் செடி என்பனவற்றைக் காணலாம். இங்குள்ள நூல் நிலயத்தில் 25 லட்சம் உலர்ந்த செடிகளும் பல அரிய தாவர நூல் புத்தகங்களும் உள்ளன. புரி இயல், விவசாயம் போன்ற துறைகளின் நூல்களும் உள்ளன.

வடஹௌராவில் ராமகிருஷ்ண மிஷனின் தலைமையாம் போலூரில் உள்ளது. இதை 1899ல் சுவாமி விவேகானந்தர் நிறுவினார். 19வது நூற்றாண்டில் வாழ்ந்த ராமகிருஷ்ண பரமஹம்சரின் பிரதம சீடர் இவர்.


தாவரப் பூங்காவிலுள்ள பெரிய ஆலமரம்



எல்லா மதங்களும் ஒன்றுபட வேண்டு மென்ற குறிக்கோளுடன் இந்த மிஷன் செயல் படுகிறது.

பேலூர் மடத்திலுள்ள கோவில் இக் குறிக் கோளின் உறைவிடமாக விளங்குகிறது. இக் கோவில் ஹிந்துக்களின் கோவில், முஸ்லிம் களின் மசூதி, கிருஸ்துக்களின் சர்ச் ஆகியவற் றின் உருவ அமைப்புகளைத் தன்னுள் கொண்டு உள்ளது.

ஹூக்ளியின் மறு கரையில் அழகிய தக்ஷிணேஸ்வர காளி கோவில் உள்ளது. இந்த கோவில் ராமகிருஷ்ணபரமஹம்ஸர் அர்ச்சகரா கப் பணிபுரிந்தபோது தான் எல்லா மதங்களின் ஒற்றுமை பற்றி எண்ணம் பெற்றார் இந்த ஆலயம் 1847ல் கட்டப்பட்டது.

தக்ஷிணேஸ்வரின் தெற்கேயுள்ள குமார்துலி யில் நேர்த்தியான மண் பாண்டங்கள் செய்யப் படுகின்றன. துர்க்கா பூஜைக்கு அழகிய பொம்மைகளை இங்குள்ளவர்கள் தயாரிக் கிறார்கள். இவை வண்ணம் தீட்டப்பட்டு பச்சை மண்ணில் கொடுக்கப்படுகின்றன. பூஜைக்குப் பின் ஆற்றிலும் கடலிலும் இவைக் கரைக்கப் படுகின்றன.

**தக்ஷிணேஸ்வர்காளி கோவில்**

தசராவின் போது இங்கு துர்க்கா பூஜை நடக்கிறது. துர்க்கை (பார்வதி) சிவபிரானை மணக்க விரும்பவே அவளது தாய் மேனா இதை விரும்பவில்லை. ஆனால் பார்வதி கடுந் தவம் புரிந்து சிவனை மணம் புரிந்த கொண் டாள். சிவபிரானும் அவளைத் தம் முடன் கைலாயத்திற்கு அழைத் துச் சென்றார். தம் மகள் பார்வதி யைப் பிரிந்திருந்த இமவானும் அவள் மனைவியும் ஆண்டு தோறும் சில நாட்களுக்கு தம் மிடம் வரும் தம் மகளைக் கண்டு ஆறுதல் அடைந்தனர். பார்வதி இவ்வாறு தம் பெற்றோரைக் காண வருவதைத்தான் துர்க்கா பூஜை யாகக் கொண்டாடுவதாகப் பெரும்பாலான வங்காளிகள் நம் புகிறார்கள்.



**களி மண்ணாலான துர்க்கை உருவம்**



# கவிதை முத்தானது!

மருங்காபுரி ஜமீனில் மஞ்சுநாதர் என்ற மகாகவி இருந்தார். அவரது கவிதைகள் யாவரையும் கவர்ந்தன அவரது ஹாஸ்யக் கவிதைகளையும் எல்லோரும் ரசித்தார்கள். ஆனால் ஜமீனின் திவான் தினகரனுக்கு மட்டும் கவிஞரின் கவிதைகளும் அவர் பேசுவதும் கொஞ்சமும் பிடிக்கவில்லை. இதை மஞ்சுநாதர் நன்கு அறிந்திருந்தார்.

நாளுக்கு நாள் மஞ்சுநாதரின் புகழ் பெருகி வருவது தினகரனுக்கு எரிச்சலையே மூட்டியது. ஆனால் கவிஞர்களை மதிக்கா விட்டால் ஜமீனுக்கே கெட்ட பெயர் வரும் என்பதை திவான் தினகரன் உணர்ந்திருந்தார். அதனால் மஞ்சுநாதருக்கு வேறுவிதங்களில் தொல்லை கொடுப்பது என்று தீர்மானித்துக் கொண்டார்.

மஞ்சுநாதருக்கு மானியமாகக் கொடுத்த நிலத்திலிருந்து நூறு மூட்டை நெல் கிடைத்து வந்தது. தினகரன் அந்த நிலத்தை உழும் குடியானவர்களை நெருக்கி அந்த வருடம் பயிர் சரியாக விளையவில்லை என்று சொல்லச் சொல்லி பத்து மூட்டை நெல்லை கொடுக்க வைத்தார்.

அது மட்டுமல்ல. ஜமீன்தாரர் மஞ்சுநாதரை கௌரவிக்கும் போதெல்லாம் பொற்காசுகளைக் கொடுப்பது வழக்கம். ஆனால் திவான் அந்த வழக்கத்தை மாற்றி கவிஞரை கௌரவிக்கப் பொன்னாடை போர்த்தினால் போதும் என்று கூறி சாதாரணக் கைத்தறித் துண்டைப்போர்த்தச் செய்தார்.

இதை எல்லாம் மஞ்சுநாதர் எவ்வித எதிர்ப்பும் கூறாமல் சகித்துக் கொண்டு வந்தார். தினகரனுக்குத்தன் மீதுள்ள வெறுப்பை அவர் நன்கு அறிவாராதலால் அவராக மனம் திருந்த காலம் வழி செய்யும் என்று எண்ணிப் பொறுமையுடன் இருக்கலானார்.

திவானின் இத்தகைய நடவடிக்கை

—எஸ். சோபினி—



களால் கவிஞரின் வருமானம் குறைந்து போயிற்று. பணமில்லாமல் அவர் மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார். இந்த சமயத்தில் சிங்கபுர சமஸ்தானத்திலிருந்து கங்காதரன் என்ற பண்டிதர் வந்து திவான் தினகரனைத் தம் பேச்சால் கவர்ந்தார். திவானும் ''உங்களுக்கு என்ன வேண்டுமோ கேளுங்கள்'' என்றார்.

அவரும் ''ஐயா! உங்கள் சமஸ்தானக் கவிஞர் மஞ்சுநாதரை எம் மன்னர் அழைத்து வரச் சொன்னார். அவரது வாக்கு சாதுரியத்தைநேரில் கேட்டு மகிழ வேண்டுமென எங்கள் மன்னர் விரும்புகிறார். அதனால் மஞ்சுநாதரை என்னுடன் நீங்கள் அனுப்பி வைக்க வேண்டும்'' என்றார்.

தினகரனும் ''எல்லோரும் பொன்னும் ரத்தினங்களும் வேண்டுமென்று தான் கேட்பார்கள். நீங்கள் கவிஞரை உங்களுடன் அனுப்ப வேண்டுமெனக் கேட்பது விசித்திரமாக இருக்கிறது. நீங்கள் அவரை தாராளமாக அழைத்துப் போங்கள். எனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை'' என்றார்.

அப்போது கங்காதரர் ''எம் மன்னர் எனக்கு எவ்விதக் குறையும் வைக்காமல் எனக்குப் பொன்னும், மணியும் கொடுத்துக் கொண்டே இருக்கிறார். அதனால் நான் பணம் கேட்கவில்லை. மேலும் வேறு சமஸ்தானத்திடம் பணம் கேட்டு வாங்குவது எம் சமஸ்தானத்தின் கெளரவத்தையே குலைப்பதாகும். அதனால் எனக்குப் பணம் பரிசாகக் கொடுக்காதீர்கள். நான் கேட்டுக் கொண்டபடி மகாகவி மஞ்சுநாதரை என்னுடன் அனுப்பினால் போதும். இப்படி வேண்டி எம் சமஸ்தான அதிபரின் விருப்பத்தையும் நிறைவேற்றவே விரும்புகிறேன்'' என்றார்.

மஞ்சுநாதருக்குப் பணம் தேவைப்படுவதால் கங்காதரருடன் அனுப்பி வைத்தால் அவர் கண்டிப்பாக பணம் கேட்பார், அதனால் நம் ஜமீனின் கெளரவம் போய் விட்டதாகக் கூறலாம் என்று எண்ணி தினகரன் மகிழ்ந்தார். அவர் கங்காதரரிடம் ''அது சரி மஞ்சுநாதரிடமிருந்து உங்கள் மன்னர் என்ன எதிர்பார்க்கிறார்?'' என்று கேட்டார்.

கங்காதரரும் ''எங்கள் நாடு செழிப்பாய் சுகமாகவும் அமைதி நிலவியும் உள்ளது. அதைப் பாராட்டி மஞ்சுநாதர் கவிதைகள் கூற வேண்டுமென எங்கள் மன்னர் எதிர்பார்க்கிறார். அவ்வளவுதான்'' என்றார்.

மஞ்சுநாதர் யாரையும் புகழ்ந்து கவிதைகூற மாட்டார் என்பது தினகரனுக்கு நன்கு தெரியும். அதனால் அவரைகங்காதரருடன் அனுப்புவதாகக் கூறினால் அதற்கு அவர் இணங்க மாட்டார். ஏனெனில் அங்கு போனால் அந்த மன்னரைப் புகழ வேண்டும் அதற்காகத்தான் அவரை கங்காதரருடன் அனுப்ப தினகரன் இணங்கினார். ஆனால் மஞ்சுநாதர் கங்காதரருடன் சிங்கபுரத்திற்குச் செல்வதாகக்கூறியதும் தினகரன் ஆச்சரியப்பட்டார். அவர் மஞ்சுநாதர் சிங்கபுரத்திற்குப் புறப்படும் போது ''கங்காதரர் தம் சமஸ்தான கௌரவத்தைக் காத்தது போல எம் சமஸ்தான கவிஞர் மஞ்சுநாதர் எம் ஜமீனின் கௌரவத்தைப் பாதுகாக்கவே செய்வார்'' என்று விஷமச் சிரிப்பு சிரித்தவாறே கூறி அனுப்பினார்.

கங்காதரருடன் சென்ற மஞ்சுநாதரை சிங்கபுரம் மன்னர் கௌரவித்து வரவேற்றார். மஞ்சுநாதரும் அந்நாடு மிகவும் செழிப்பாயும் சுகமாயும் இருப்பது கண்டு அந்நாட்டையும் மன்னனையும் புகழ்ந்து பல கவிதைகளைப் புனைந்து கூறிப் பாராட்டினார். அது கேட்டு சிங்கபுர மன்னர் மகிழ்ந்து ''நீங்கள் பரிசாக என்ன பெற விம்புகிறீர்கள்?!''என்று கேட்டார்.

மஞ்சுநாதரும் ''அரசே! பண்டிதர்கள் எதைக் கேட்டாலும் அதைக் கொடுப்பது தம் கடமை என்று மன்னர்கள் கருதி வந்திருக்கிறார்கள். ஆனால் கவிஞர்கள் இதுதான் வேண்டுமெனக் கேட்பது சரியல்ல. என் கவிதைக்குத் தாங்கள் எதைக் கொடுத்து கௌரவிக்க விரும்புகிறீர்களோ அதைக் கொடுங்கள். மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறேன்'' என்றார்.

மன்னரும் ''தங்கள் கவிதைக்கு எவ்வளவு கொடுத்தாலும் தகும். நான் என் சக்திக்குத் தக்கவாறு இந்த நன்முத்துக்களை அளிக்கிறேன். இவை



தங்களது தகுதிக்கு மிகவும் குறைவு என்பதை நான் அறிவேன்'' என அடக் கத் துடன் கூறி ஒரு பையில் சில நன் முத்துக்களைப் போட்டுக் கொடுத் தார்.

மஞ்சுநாதரும் அதைப் பெற்றுக் கொண்டு மருங்காபுரிக்கு வந்தார். திவான் தினகரனே அவரைச் சந்தித்து அவர் கொண்டு வந்த முத்துக்களைப் பார்த்தார். அவை ஒவ்வொன்றும் லட்சம் வராகன்கள் பெறும். அவற்றை யெல்லாம் விற்றால் கவிஞரின் சந்ததி யார் ஏழேழு தலைமுறைக்கும் பணத் தட்டு என்பது இல்லாமல் வாழலாம். அப்போது தினகரன் ''கங்காதரர் என்னிடம் பணம் பெற மறுத்து தம் நாட்டின் கௌரவத்தைப் பாதுகாத் தார். ஆனால் நீங்களோ சிங்கபுர மன்னர் கொடுத்த பரிசுகளை ஏற்று நம் ஜமீனின் கௌரவத்தைத் தாழ்த்தி விட்டீர்கள்'' என்று வெறுப்புடன் கூறினார்.

மஞ்சுநாதரும் ''நான் அப்படி ஒன் றும் செய்து விடவில்லை. எனக்குச் சமமான கவிஞர் அந்த சமஸ்தானத் தில் யாருமே இல்லை. அதனால் கங் காதரர் உங்களிடம் கேட்டது போலக் கேட்டு ஒரு கவிஞரை அழைத்து வர முடியவில்லை. இந்த முத்துக்களை யும் நான் அந்த சமஸ்தான மன்னரிடம் பரிசாகக் கேட்கவில்லை. அவை தர மாகக் கிடைத்தன. நான் சிங்கபுரதர் பாரில் என்னை மறந்து கவிதை மழை பொழிந்தேன். அதில் சில துளிகள் அந்த நாட்டில் விழுந்தன. சில இந்த நாட்டில் விழுந்தன. அந்த நாட்டிலும் என் கவிதை மழையின் துளிகள் சிப்பி களில் விழுந்ததால் அவை நல்ல முத் துக்களாக மாறி எனக்குக் கிடைத்தன. ஆனால் இந்த ஜமீனில் விழுந்த கவிதை மழைத் துளிகள் பூமிக்குள் போய் மறைந்து வீணாகி விட்டன'' என்றார்.

திவான் தினகரன் சாட்டையடி கிடைத்தது போல உணர்ந்தார். கவி தைக்கு சிங்கபுரத்தில் கிடைத்த மரி யாதை மருங்காபுரியில் கிடைக்க வில்லை என அவர் கூறுகிறார் என்று புரிந்து கொண்டு அன்று முதல் தன் விஷம வேலைகளை விட்டு விட்டு மஞ்சுநாதரை மரியாதையுடன் நடத்தி அவருக்கு முன்பு கிடைத்து வந்தது போலப் பொன்னும் பொருளும் கிடைத்து வரச் செய்தார்.





ஆங்கிலேயர்களை எதிர்த்த வீரர்கள் (2)

# பக்கீர்களும் சாது சன்னியாசிகளும்

கருத்து: மீரா உக்ரா ◆ ஓவியம்: கௌதம் சென்

கோசாயிகள், கிரிகளென்ற சாதுக்களின் கும்பல் 17வது நூற்றாண்டின் இறுதியில் தீவிரவாதிகள் கூட்டமாக மாறியது. இவர்கள் அரசர்களின் கீழ் இருந்து போர்களிலும் உதவினார்கள். முகலாய சாம்ராஜ்யம் வீழ்ந்து எங்கும் கலகமும் சச்சரவும் மூண்டது. இச்சாதுக்கள் கூட்டம் பணக்காரர்களைக் கொள்ளை அடித்து ஏழைக்கு உதவலாயிற்று. பக்கீர்கள் கூட்டமும் ஹிந்துக்களின் மதிப்பையும் முஸ்லீம்களின் ஆதரவையும் பெற்றது. முதலில் சாந்தத்தை போதித்த அவர்கள் பிறகு அநியாயங்களையும் அக்கிரமங்களையும் எதிர்த்து பதிலடி கொடுக்கும்படி அவர்கள் மக்களிடம் கூறினார்கள். இவர்கள் 18வது நூற்றாண்டில் வங்காள பீகார் பகுதியில் கிழக்கிந்தியக் கம்பெனியை எதிர்த்துப் போர்க் கோலம் பூண்டார்கள்.

கோஸாயி ஹிம்மத்கிரி 1764 அக்டோபர் 22ல் நடந்த பக்ஸர் போரில் மீர் ஜபாரில் பக்கம் நின்று கிழக்கிந்தியக் கம்பனிப் படைகளை எதிர்த்தான். போரில் தோல்வியுற்றதும்.




சாதுக்கள் கம்பனி பண்டகச் சாலைகளைத் தாக்கி அங்கிருந்த ஆயுதங்களைக் கவர்ந்து கொண்டு போனார்கள்.



ஆங்கிலயருக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை.



வடவங்காளத்தில் மஜ்னூன் ஷா 1770ல் சில பகுதிகளில் தன் அதிகாரத்தைச் செலுத்தி வந்தான்.




மஜ்னூன்ஷா ஆங்கிலேயருடன் போராடி இறந்த பின்



அவரது மகன் சிராக் அலி அவன் விட்டுச் சென்ற பணியைத் தொடர்ந்தான். பவானி பாடக்கும் தேவி சௌதராணியும் அவனுக்கு உதவினார்கள். இவர்கள் வரலாற்றில் புகழ் பெற்றுவிட்டார்கள்.



அவர்கள் பணக்கார ஜமீன்தாரர்களைக் கொள்ளையடித்தார் கள் ஒரு நாள்-









அவர்களுக்குப் படகு தயாராக உள்ளது. அவர்கள் அவசரமாக அதில் குதித்து...


வேகமாகச் சென்றார்கள. படைவீரர்கள் அவர்களைப் பின் தொடர்ந்தன.
அதோ! அங் இருக்கிறார்கள் வேகமாய்ப் போங்கள்


ஆனால் –
அவர்களைக் காணோமே .
நாம் திரும்பிப் போகலாம்!
மிகஅருகில் வந்தும் பிடிபடாமல் அவர்கள் தப்பஓடினார்கள்.


பவானிபாடக் சில மனிதர்களுடன் 1788ல் பிடிபட்டுக் கொல்லப்பட்டான்.
இனி அடுத்து தேவி சௌதராணிதான்


தேவி சௌதராணி கொஞ்சகாலம் எதிர்ப்பைக் காட்டி விட்டுப் பிறகு திடீரெனப் பேசாமல் இருந்துவிட்டாள்.
அவள் எங்கு போனாள் என்று யாருக்குமே தெரியவில்லை

ஆயினும் இயக்கம் தொடர்ந்தது. கரம்ஷா என்ற பக்கீர்தன் ஆவேசமிக்கப் பேச்சுகளால் பலரைக கவர்ந்தார்.




அவர் தம் கூட்டத்திற்கு பாகல் பந்தி எனப் பெயரிட்டார். 1813ல் கரம்ஷா இறந்த பிறகு அவரது மகன் டெப்புஷா அக்கூட்டத்தை நடத்திச் சென்றார்.




பாகல் பந்திக்கு 1825ல் ஷேர்பூர் ஜமீனில் கர்ஜரிபாவைப் பிடித்துக் கொண்டு தாமே ஆட்சி புரிந்தனர். இது இரண்டாண்டு காலம் நடந்தது.




ஜமால் பூருக்கு 1826ல் ஆங்கிலப் படை பெரும் அளவில் வந்தன. அவை டெப்புஷாவை தேடிக் கொண்டு கிராமம் கிராமமாகச் சென்றன. முடிவில் 1827ல் அவரைப் பிடித்து ஆயுள் சிறைதண்டனை விதித்தார்கள்.

பக்கீர் சாது சன்னியாசிகளை அடக்க ஆங்கிலேயர்கள் மிகவும் முயன்றனர். அவர்கள் வட இந்தியாவில் கூட்டமாகச் செல்லக் கூடாதெனத் தடை விதித்தது. பக்கீம் சந்திரர் தம் நாவல் ஆனந்த மடத்தை எழுத இந்த சன்னியாசிகள் இயக்கம் ஊக்குவித்தது. அதில்தான் அவர் பல இடங்களில் வந்தே மாதரம் கீதத்தைப் புகுத்தியுள்ளார்.





# மகாபாரதம்

பீஷ்மரும் கிருபாசாரியாரும் துரியோதனனுக்கு அறிவுரைகளைக் கூறி முடித்ததும் திரிகர்த்த மன்னனான சுசர்மன் ''துரியோதனா! மத்ஸய மன்னன் பலமுறை என் நாட்டின் மீது படை எடுத்து வந்து அதைப் பாழாக்கியுள்ளான். மிக பலசாலியான அவனது சேனாதிபதியை கந்தர்வர்கள் கொன்று விட்டார்கள். இப்போது அந்த நாட்டைக் காக்க யாரும் இல்லை. எனவே எனது படைகளும் உமது படைகளும் சேர்ந்து அந்நாட்டைத் தாக்கினால் எளிதில் அதைத் தோற்கடித்து விடலாம். அந்நாட்டில் பணமும் பசுக்களும் ஏராளமாக இருக்கின்றன. அவற்றைக் கைப்பற்றி விடலாம்'' என்றான்.

சுசர்மன் கூறியது சரியெனக் கர்ணன் கூறினான். துரியோதனனும் தன் தம்பியான துச்சாதனனிடம் ''நீயும் படைகளைத் திரட்டு. சுசர்மன் மத்ஸய நாட்டை ஒரு புறத்தில் தாக்கிப் பசுக்களைக் கைப்பற்றட்டும். நாம் மறுநாள் அந்நாட்டை வேறொரு பக்கத்திலிருந்து தாக்கலாம்'' என்றான்.

அத் திட்டத்தின்படி கௌரவப் படைகளும் திரிகர்த்த நாட்டுப் படைகளும் மத்ஸ்ய நாட்டின் மீது படை எடுத்துச் சென்றன. இச்சமயத்தில் விராட நகரில் பாண்டவர்களின் அஞ்ஞாத வாசகாலமும் முடிந்து விட்டது. கீசகனின் மரணத்தால் விராட மன்னன் பல்லைப் பிடுங்கிய பாம்பு போலாகி விட்டான்.

சுசர்மனின் படைகள் மத்ஸ்ய நாட்டை ஒரு புறத்தில் தாக்கி அங்குள்ள பசுக்களைப் பிடித்தன. இச்செய்தியைக் கேட்ட விராட மன்னன் தன் படைகளைத் திரட்டிக் கொண்டு சுசர்மனை எதிர்த்து போராடச் சென்றான். அவனோடு தருமரும், பீமனும், நகுலனும், சகதேவனும் தேர்களில் அமர்ந்து சென்றனர்.

**—மாடு பிடிச் சண்டை—**



விராடனின் படை சுசர்மனின் படையைத் தாக்க ஆரம்பித்த போது மாலைப் பொழுதாகி விட்டது. சற்று நேரத்தில் இருள் சூழவே சுசர்மன் விராட மன்னனுடன் போர் புரிந்து அவனைப் பிடித்து விட்டான். இதைக் கண்ட தருமர் பீமனிடம் ''நீ சுசர் மனைத்தாக்கி விராட மன்னனை விடு வித்துக் கொண்டு வா. ஆனால் போர்க் களத்தில் நீ உன்னை இன்னானெனக் காட்டிக் கொண்டு விடாதே'' எனக் கூறினார்.

பீமன் சுசர்மனை எதிர்த்துப் போர் புரிந்து விராட மன்னனை விடுவித்துக் கொண்டு வந்ததோடு சுசர்மனையும் பிடித்து விட்டான். தருமர் அவனை ஒன்றும் செய்யாமல் விட்டு விடும் படிக் கூறினார். விராட மன்னன் சுசர் மனை விட்டு விட்டு அவன் பிடித்து வைத்திருந்த பசுக்களையும் மீட்டான்.

தான் வெற்றி பெற்ற செய்தியை விராட மன்னன் தலை நகருக்கு அனுப் பினான். இதே சமயம் அந்நாட்டில் வேறொரு புறத்திலிருந்து கௌரவப் படைகள் உட்புகுந்தன. அதில் பீஷ் மர், துரோணர், கர்ணன் போன்ற பல பெரும் வீரர்களும் இருந்தனர். இந்த கௌரவப் படை ஏராளமான பசுக் களைப் பிடித்தது. இச்செய்தி விராட நகருக்கு உடனே ஒருவரை அனுப்பித் தெரிவிக்கப்பட்டது. விராட மன்னன் அப்போது தலைநகரில் இல்லாததால் அச்செய்தி அவனது மகனான உத்திர னிடம் தெரிவிக்கப்பட்டது.

அப்போது உத்திரன் அந்தப்புரத் தில் பெண்களிடையே இருந்தான். அப் பெண்கள் உத்திரனை ஒரு மாபெ ரும் வீரன் என்று புகழ்ந்து கூறி அவன் உடனே சென்று கௌரவப் படையை எதிர்த்துப் போராடி அதனிடமிருந்து பசுக்களை மீட்க வேண்டுமென்று சொன்னார்கள்.

அவனும் ஜம்பமாக ''என்னால் கௌரவப் படையை எளிதில் தோற் கடிக்க முடியும். இந்த துரியோதன னும் கர்ணனும் என் முன் நிற்க முடி யாது. பீஷ்மர், துரோணர், கிருபர்காரி யார் என்று யார் வந்தாலும் நான் அவர் களைப் புறமுதுகு காட்டி ஓட வைத்து விடுவேன். அவ்வளவு சக்தி எனக்கு உள்ளது. ஆனால் என் ரதத்தை ஓட்டிச் செல்ல ஒரு நல்ல தேரோட்டி இல் லையே'' என்று ஒரு நொண்டிச் சாக் கைக்கூறினான். அப்போது பெண்கள் கூட்டத்தில் சைரந்திரியும் பிரகன்ன ளையும் இருந்தனர். பிரகன்னளை சைரந்திரிக்குச் சைகை செய்யவே,



சைரந்திரியும் உத்திரனிடம் ''இந்த பிரகன்னளை ஆணுமல்ல, பெண்ணு மல்ல. அர்ஜுனனின் தேரோட்டியா கப் பல தடவைகளில் பணி புரிந்தி ருக்கிறாள். எனவே இவளை உங்கள் தேரோட்டியாகக் கொண்டு போர்க் களத்திற்குச் செல்லுங்கள்'' என்றாள். அவனது தங்கை உத்திரையும் தன் அண்ணனிடம் ''அண்ணா! சைரந்திரி சொல்வது சரியே. நீ ஒருவனாகப் போவதை விட பிரகன்னளையும் உன்னோடு இருப்பது நல்லது. பாண்டவர்களில் சிறந்த வீரரான அர் ஜுனனின் தேரோட்டிாயக இருந்த தால் நல்ல திறமை பெற்றே இருக்க வேண்டும்'' என்று சொல்லி பிரகன்ன ளையை அழைத்துக்கொண்டு போகு மாறு கூறினாள். உத்திரனும் அதற்குச் சம்மதித்து ரதத்தில் அமர, பிரகன் னளை அதை ஓட்டிக் கொண்டு போர்க்களம் நோக்கிச் சென்றாள். உத்திரை தன் சகோதரனிடம் ''அண்ணா! நீ போரில் பீஷ்மரையும் துரோணரையும் வென்று அவர்களது அங்கவஸ்திரங்களை எடுத்து வந்து எனக்குக் கொடுக்க வேண்டும்'' என்று கூறி அனுப்பினாள். பிரகன்ன ளையோ ''உத்திரன் வெற்றி பெற்றால் அவற்றைக் கொண்டு வந்து கொடுப் பான்'' என்று சிரித்துக்கொண்டே கூறி னாள்!

ரதத்தில் அமர்ந்திருந்த உத்திரனி பிரகன்னளையிடம் ''நாம் போர்க் களத்திற்குப் போய் கௌரவப் படை யைச் சிதற அடித்து பசுக்களை மீட்டு வரப் போவதை எல்லோரும் மூக்கின் மேல் விரலை வைத்துப் பார்க்கப் போகிறார்கள்'' என்று கூறிப் பெருமை அடித்துக்கொண்டான். பிர கன்னளையான அர்ஜுனன் சிரித்துக் கொண்டே ரதத்தை ஓட்டிச்சென்றான்.

அப்போது ரதம் முன்பு பாண்டவர் கள் தம் ஆயுதங்களை ஒளித்து வைத்தி மரத்தை அணுகியது. அப்போது கொஞ்ச தூரத்தில் கடல் போலப் பரந்து நிற்கும் கௌரவப் படையை உத்திரன் கண்டு மலைத்துப் போய் ''அடேயப்பா! இவ்வளவு பெரிய படையா!'' எனக் கூறி நடுங்கினான். பிரகன்னளையிடம் ''இந்தப் பெரிய படையை எதிர்க்க என்னால் முடி யாது. பார்க்கவே பயமாக இருக் கிறதே. போரில் என் உயிர் போய் விட்டால் என்ன ஆவது? மற்றவர்கள் கேலி செய்தாலும் பரவாயில்லை. நான் போர் புரியமாட்டேன்'' என்று கூறிதேரைத் திருப்பித்தலைநகருக்கே



ஓட்டிச் செல்லும்படி மன்றாடினான்.

பிரகன்னளையோ ''பயப்படாதே இப்படி நீ நடுங்கினால் எதிரிகள் சிரிப்பார்கள். நீ போர் புரிந்து வெற்றியுடன் திரும்பி வருவதாக அந்தப்புரத்துப் பெண்களிடம் பெருமை அடித்துக் கொண்டாயே, நாம் போர்களத்திற்குப் போய் போரிட்டு வெற்றியுடன் தான் திரும்பிச் செல்வோம்'' என்றான்.

உத்திரனோ ரதத்திலிருந்து கீழே குதித்து ஓடி விட முயன்றான். பிரகன்னளையான அர்ஜுனன் அவனைப் பிடித்து ''ஆறிலும் சாவு. நூறிலும் சாவு. போரில் இறந்தால் வீர சொர்க்கம் அடையலாம். நான் கௌரவப் படையை எதிர்த்துப் போர் புரிகிறேன். நீ இந்தத் தேரை ஓட்டு. முதலில் எனக்கு ஒரு வேலை உள்ளது. அதை ஒரு நொடியில் முடிக்கிறேன். நீ இங்கேயே இரு'' எனக் கூறி அந்த மரத்தின் மீது ஏறினான். அங்கு வைக்கப்பட்ட ஆயுதங்களில் அவன் தன் வில்லான காண்டீபத்தையும் அம்புறாத் தூணியையும் எடுத்துக் கொண்டு கீழே இறங்கி வந்தான்.

அவன் உத்திரனிடம் ''உத்திரா! உன்னிடம் உள்ள ஆயுதம் எதுவும் போர்களத்தில் பயனை அளிக்காது. இந்த மரத்தின் மீது பாண்டவர்கள் தம் ஆயுதங்களை மறைத்து வைத்திருக்கிறார்கள். அவற்றிலிருந்து இப்போது நான் எடுத்து வந்தது அர்ஜுனனின் காண்டீபம் என்ற வில்'' என்றான். அதைக் கேட்ட உத்திரன் ''பாண்டவர்களின் ஆயுதங்களா? அவை இந்த மரத்தின் மேலேயா உள்ளன? பாண்டவர்கள் அவற்றை இங்கு ஒளித்து வைத்தார்களா அல்லது வேறு யாராவதா? உனக்கு இது எப்படித் தெரியும்? பாண்டவர்கள் ஏன் அவற்றை இங்கு மறைத்து வைக்க வேண்டும்? இங்கே ஒளித்து வைத்து விட்டு எங்கே போனார்கள்?'' என்று கேட்டான்.

அர்ஜுனனும் ''அவர்கள் எங்கும் போய் விடவில்லை. உன் ஊரில்தான் இருக்கிறார்கள். நான்தான் அர்ஜுனன். உன் தந்தையுடன் இருக்கும் கங்குபட்டர்தான் தருமர். சமையற்கட்டில் பணிபுரிபவர் பீமன். பசுக்களையும் குதிரைகளையும் பார்த்துக்கொள்பவர்கள் நகுலனும், சகதேவனும் ஆவர். அரசிக்குப் பணிப் பெண்ணாக இருக்கும் சைரந்திரிதான் துரௌபதி, கீசகன் அவள் காரணமாகத்தான் இறந்தான். அவனைக் கொன்றது வல்லபனான பீமன்'' என்றான்.



உத்திரன் முதலில் இதை நம்பவில்லை. அப்போது அர்ஜுனன் தன் காண்டீபத்தின் நாணைச் சுண்டி இழுத்து ஒலியைக் கிளப்பவே உத்திரன் மட்டுமல்ல, கௌரவப் படையே அதைக் கேட்டு நடுங்கியது. உத்திரன் அர்ஜுனனின் கால்களில் விழுந்து ''என்னை மன்னித்து விடுங்கள். இதுவரை உங்களை யாரென்று நான் அறிந்திருக்கவில்லை. இப்போது நான் உங்களுக்கு மகிழ்ச்சியுடன் ரதத்தை ஓட்டிக் கொண்டு போர்களத்தை அடைகிறேன்'' என்றான்.

அர்ஜுனன் தன் கையிலிருந்த வளையல்களைக் கழற்றி வைத்தான். தன் தலைமுடியைச் சரிசெய்து கொண்டான். பின்னர் மீண்டும் காண்டீபத்தின் நாணை மீட்டி ஒலி எழுப்பினான். அவன் தன் சங்கை எடுத்து முழக்கம் செய்ததும் கௌரவப் படை அரண்டது. அர்ஜுனன் ரதத்தில் வருவதை துரோணர் துரியோதனனுக்குக் காட்டி ''அதோ பார்! அர்ஜுனன் வந்து கொண்டிருக்கிறான்'' என்றார்.

அதைக் கேட்ட துரியோதனன் ''ஓ! அப்படியானால் பாண்டவர்கள் தாம் இருப்பதை அஞ்ஞாதவாச காலம் முடிவதற்கு முன் தெரிவித்து விட்டார்கள். அதனால் நிபந்தனை படி அவர்கள் மீண்டும் வனவாசத்தை மேற்கொள்ள வேண்டியதுதான்'' என்று மகிழ்ச்சி தாங்க முடியாமல் கூறினான். அப்போது துரோணர் ''அர்ஜுனன் அஞ்ஞாத வாசகாலம் முடிந்த பிறகே தான் இன்னானென அறிவித்திருக்கிறான். அவன் கணக்குப் போட்டுத் தான் பார்த்திருக்கிறான். கணக்குப்படி அஞ்ஞாத வாச காலம் முந்தா நாளே முடிந்து விட்டது'' என்றார்.

''அப்படியானால் நான் போட்ட கணக்குதான் தவறா?'' என துரியோதனன் கேட்கவே அவரும் ''ஆம் அதில் சந்தேகமே இல்லை'' என்றார். பீஷ்மரும் ''துரோணர் சொல்வது சரியே. பாண்டவர்களின் அஞ்ஞாத வாசகாலம் முந்தா நாளன்றே முடிந்து விட்டது. அதை அறிந்துதான் அர்ஜுனன் காண்டீப நாணின் ஒலியை எழுப்பி சங்க நாதம் செய்திருக்கிறான்'' என்றார். பீஷ்மரும் துரோணரும் இவ்வாறு கூறவே துரியோதனனும் அதை எதிர்த்துக் கூற முடியாது போனான்.

ஆனாலும் அவன் ''எது எப்படி இருந்தாலும் சரி. நான் பாண்டவர்களுக்கு நாட்டைக் கொடுக்க மாட்டேன். அவர்கள் என்னுடன் போர்

புரிந்து என்னை வென்று நாட்டை எடுத்துக் கொள்ளட்டும்'' என்றான். அப்போது பீஷ்மர் ''அது பற்றிப் பிறகு யோசிக்கலாம். இப்போது நீ பிடித்து வைத்துள்ள மாடுகளுடன் நம் படையில் கால் பகுதியுடன் கிளம்பிப் போய் விடு. இன்னொரு கால் பகுதி உங்களையெல்லாம் பாதுகாக்கப் பின்னாலேயே வரும். இப்போது நீ இங்கிருந்து அர்ஜுனனிடம் அகப்படாமல் ஹஸ்தினாபுரத்திற்குச் சென்றால்தான் நீ தலை நிமிர்ந்து நடக்க முடியும். எனவே நீ அவனிடம் அகப்படாமல் தப்பிப் போய் விடு. மற்ற பாதிப் படைகளைக் கொணடு நானும் துரோணரும் மற்ற வீரர்களும் சேர்ந்து அர்ஜுனனை எதிர்க்கிறோம்'' என்றார்.

இந்த ஏற்பாட்டை. அனைவரும் ஏற்றனர். துரியோதனனும் படையின் கால் பகுதியுடனும் பசுக்களுடனும் கிளம்பிச் சென்றான். பீஷ்மர் மீதமிருந்த பாதிப் படையை அணி வகுத்து நிறுத்தி வைத்தார். அதில் துரியோதனன் இல்லாது போகவே அதை கவனித்த அர்ஜுனன் உத்திரனிடம் ''இதில் துரியோதனன் இல்லை. அவன் எங்கோ தப்பி ஓடிக் கொண்டிருக்கிறான். அவனை நாம் பிடிக்க வேண்டும். இங்கு பீஷ்மர், துரோணர், கர்ணன், கிருபாச்சாரியார், அசுவத்தாமா ஆகிய வீரர்களே இருக்கிறார்கள். துரியோ தனனை மட்டும் காணவில்லை. எனவே அவன் ஹஸ்தினாபுரத்திற்குப் பசுக்களை ஓட்டிக் கொண்டு சென்று கொண்டிருக்க வேண்டும். அதனால் நம் தேரைப் போர்க்களத்தை நோக்கிச் செலுத்தாதே. துரியோதனன் போகிற வழியில் விரைந்து சென்று அவனைப் பிடிப்போம்'' என்றான்.

உத்திரனும் அர்ஜுனன் கூறிய வழியில் ரதத்தைச் செலுத்தினான். அர்ஜுனனின் ரதம் போர்க் களத்திற்கு வராமல் வேறு பாதையில் செல்வதைக் கண்ட கிருபாசாரியார் ''அர்ஜுனன் துரியோதனனைப் பிடிக்கச் சென்று கொண்டிருக்கிறான். அவன் ஹஸ்தினாபுரத்திற்குத்தான் போகிறான் என்பது அர்ஜுனனுக்குத் தெரிந்து விட்டது. துரியோதனனால் அர்ஜுனனை எதிர்த்துப் போராட முடியாது. எனவே நாம் துரியோதனனுக்கு உதவி புரியச் செல்வோம்'' என்றார்.



# அம்புலிமாமா செய்திகள்

**யோசனை புரியும் ரோபோ!**

புகழ் பெற்ற ஜப்பானிய நிறுவனமான ஹோண்டா இப்போது பி-2 என்ற மனிதமய ரோபோவை உருவாக்கியுள்ளது. இதன் உயரம் 6 அடி நிறை 210 கி.கிராம். இது விண் வெளிவீரர் உடுத்தும் உடை போல அணிந்துள்ளது. இது சம தரையில் முன்னும் பின்னும் நடக்கக் கூடியது.



படிகள் ஏறி உயரச் செல்லக் கூடியது. கீழே தள்ள முயன்றால் அது தன் கால்களை பலமாக ஊன்றிக் கொள்ளக் கூடியது. தேவையானால் இது தன் இரு கைகளைக் கூடப் பயன்படுத்துமாம். டோக்கியோ பல்கலைக் கழகத்தில் ரோபோடிக் பிரிவைச் சேர்ந்த பேராசிரியர் சுசுமா டோசி இதனை உருவாக்கியவர்.

**அரிய ஞாபகச் சக்தி**

கேரளாவில் மஞ்சேரி என்ற ஊரில் சூபில் என்ற சிறுவன் இரண்டாவது வகுப்பு மாணவன். ஒரு மாதத்தின் தேதியை சொன்னதும் இவன் அது என்ன கிழமை என்று கூறி விடுகிறான். 1997ன் 365 நாட்களையும் இவ்வாறு நொடியில் கூறுகிறான். இவ்வளவுக்கும் இவன் கணிதத்தில் கெட்டிக்காரனும் அல்ல. படிப்பிலும் சாதாரண



நிலையில் உள்ளவனே. ஆனால் அவனது 'காலண்டர்' அறிவு மட்டும் வியக்கத் தக்கதாய் உள்ளது. வீட்டிலும், ஊரிலும் நாட்டிலும் நடந்த சம்பவங்களின் சரியான தேதிகளைச் சரியாகச் சொல்லி விடுகிறான். இவனது ஞாபக சக்தி மிகவும் அரியது.

**அருங்காட்சியகம்**

அமெரிக்காவில் ஆர்மிங்கடனில் சிறார்களுக்காக செய்தி அருங்காட்சியகம் ஒன்றை அமைத்திருக்கிறார்கள். இதில் நுழைந்தால் ஒரு பத்திரிகை அலுவலகத்தில் நுழைவது போலத் தோன்றும். அது மட்டுமல்ல, அப்போதே ஒரு ரிபோர்ட் டராகவோ ஆசிரியராகவோ பணியாற்றவும் முடியும். இங்குள்ள கணிப்பொறி யந்திரத்தால் பத்திரிகையை வெளிப்படுத்தவும் முடியம். உலகில் எல்லாப் பகுதிகளிலிருந்து கிடைக்கும் செய்திகளைத் தேர்ந்தெடுத்து பத்திரிகை ஆசிரியராக அனுபவமும் பெற முடியும். அதே இடத்தில் ஒரு பகுதியில் தொலைக் காட்சி அறிவிப்பாளரா கவோ, உரையாடுபவராகவோ ஆக பிரமுகர்களையும், பத்திரிகை ஆசிரியர்களையும் பேட்டி காணும் வாய்ப்பும் கிடைக்கிறது. உலகச் செய்திகளை உடனுக்குடன் அப்பகுதிகளைக் காட்டித் தெரிவிக்கும் ஒரு குளோப் உள்ளது. பிறந்த நாளையும் தேதியையும் தெரிவித்தால் அடுத்துள்ள தொலைக்காட்சித் திரையில் நாம் கூறிய தேதியின் செய்தித்தாளின் முன் பக்கத்தைக் காணமுடிகிறது.

அம்புலிமாமா அனுபந்தம் 108



நம் நாட்டுக் கண்கவர் காட்சிகள்

# லேபாக்ஷி ஆலயம்



விஜய நகர மன்னர்கள் தென்னிந்தியாவில் கலையழகு ததும்பும் பல ஆலயங்களைப் பல இடங்களில் கட்டினார்கள். அவ்வித ஆலயங்களில் ஒன்றுதான் ஹிந்துப்புரத்திற்கு மேற்கே பதிமூன்று கி.மீ. தொலைவிலுள்ள லேபாக்ஷி ஆலயம். இது 1538ல் கட்டப்பட்டதாம். விஜய நகர மன்னர்கள் காலத்தின் சிற்பக் கலைக்கு இது ஒரு எடுத்துக்காட்டு.

லேபாக்ஷி ஒரு தனிப்பட்ட சம்பிரதாயக் கலை. இந்த ஆலயத்தைப் பற்றி பல கதைகள் வழக்கில் உள்ளன. ஒரு சிறு குன்றின் மீது அமைந்துள்ளது மேற்குப் பக்கத்தில் பல தேவதேவதைகளின் சிற்பங்களோடு கூடிய தூண்களை கொண்ட ஒரு மண்டபம் உள்ளது. மண்டபத்துக்கூரையின் அடிப்பகுதியில் பளிச்சென உள்ள சிவப்பு, மஞ்சள், இளம் பச்சை ஆகிய நிறங்களில் பல ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. ஒரே கல்லில் செதுக்கப்பட்ட ஏழு தலைப் பாம்பின் சிலை இங்கு குறிப்பிடத்தக்கதாய் உள்ளது. கருங்கல்லில் செதுக்கப்பட்ட ஒருபெரிய சிவலிங்கமும் இங்கே உள்ளது. இந்த ஆலயத்திலிருந்து அரை கி.மீ. தொலைவில் ஒரே சிவப்புக் கல்லில் உருவாக்கப் பட்ட மிகப் பெரிய லேபாக்ஷி நந்தி விக்கிரகம் உள்ளது. இது நம் நாட்டிலே உள்ள மிகப்பெரிய நந்தி விக்கிரகமாம். நம் நாட்டின் சிற்பக் கலையின் உயர்விற்கு எடுத்துக்காட்டு இதுவாகும்.



# கௌசிகர்

கௌசிகர் மக்கள் மனம் மகிழ ஆட்சி புரிந்த மன்னர். கருணை உள்ளம் கொண்டவர். மக்களின் அன்பிற்கும் மரியாதைக்கும் பாத்திரமானவர். அவர் தினமும் அரசாங்க அலுவல்களை கவனித்து விட்டு இரவில் படுக்கச் சென்றால் நள்ளிரவில் போது அவர் ஒரு கோழிக் குஞ்சாக மாறி விடியும் போதுதான் மீண்டும் மனித உருப்பெறுவாராம். இந்த ரகசியம அவரது மனைவி ஒருத்திக்குத்தான் தெரிந்திருந்தது.

ஒருநாள் காலவர் என்ற முனிவர் கௌசிகரைக் காண வந்தார். அவரிடம் தன் கணவரின் பரிதாப நிலையை ராணி கூறி அதற்கு என்ன காரணம் என்று கேட்டாள். அவரும் கண்மூடி சற்று யோசித்துப் பார்த்து ''இவருக்கு முன் பிறப்பில் கோழி மாமிசம் மிகவும் பிடித்தது. அதனால் தினமும் பல கோழிகளைப் பிடித்துக் கொன்று அவற்றில் நல்லவற்றின் மாமி சத்தை மட்டும் உண்டு வந்தார். இதனால் கோபமடைந்த தாமிரசூடன் என்ற கோழி மன்னன். இவருக்கு மறுபிறப்பில் இரவில் இவர் கோழியாக வேண்டுமெனச் சபித்தான். இந்த சாபத்தைப் போக்கிக் கொள்ள இவர் பரமசிவனைக் குறித்துத் தவம் செய்ய வேண்டும்'' என்று கூறினார்.

கௌசிகரும் ஒரு குகையில் அமர்ந்து பரமசிவனைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தார். சிவனாரும் அவர் முன் தோன்றி அவருடைய சாபத்தைப் போக்கினார். கௌசிகரும் அரண்மனைக்குத் திரும்பினார். அவர் தெய்வ பக்தியும் ஜீவகாருண்யமும் கொண்டு நன்கு ஆட்சி புரிந்து வந்தார்.



## மிகப் பழைய அகராதி






தற்போது பலமொழிகளில் பல்வித வடிவளவில் அகராதிகள் கிடைக்கின்றன. இவை சொற்களின் பொருள், அவற்றின் உபசரிப்பு, உபயோகிக்கும் விதம் பற்றிய விவரங்களை அளிக்கின்றன. முதன் முதலாவது ஆங்கில அகராதி 1775ல் டாக்டர் சாமுவேல் ஜான்ஸனால் தொகுக்கப்பட்டது. ஆனால் மிகப் பழைய அகராதி கி.பி. நான்காவது நூற்றாண்டில் பாரசீக மொழியில் 5000 சொற்களைக் கொண்ட அகராதி பத்ருத்தீன் இப்ரஹீம் என்பவரால் ஒரு இந்திய மன்னரின் ஆதரவில் தொகுக்கப்பட்டது. இதில் மருத்துவம், விவசாயம், புவிஇயல், உயிரியல், தாவர இயல் ஆகியவை தொடர்பான சொற்கள் காணக் கிடைக்கின்றன.

இதற்கடுத்த பழைமையான 13வது நூற்றாண்டு அகராதி ஒன்று பாக்தாதில் ஒரு நூலகத்தில் இருந்தது. ஆனால் மங்கோலிய மன்னன் செங்கிஸ்கான் அந்த நூலகத்தைத் தீக்கு இரையாக்கினான். அந்த நூலகம் மூன்று நாட்கள் வரை எரிந்து முழுவதுமாகச் சாம்பலாகி விட்டது.

## வானவில்





### ரெக்கி

இது பாமர மக்களின் பிடித்தமான இசை 1960ல் இது ஜமைக்காவில் ஆரம்பமாகி மிக விரைவாக மேற்கிந்தியத் தீவுகளில் பரவி விட்டது. ஒவ்வொரு 'பாரி'லும் இரண்டாவது, நான்காவது எண்ணிக்கையில் 'ஹெவி பீட்'டில் ரெக்கியின் சந்தம் அமைகிறது. ரெக்கியின் பாடல்கள் ஜமைக்க மொழியில் கரீபியன் கலாச்சாரத்தை வெளிப்படுத்துவதாக அமைந்து உள்ளன. சில ரெக்கி இசைத் தட்டுகளில் குரல் ஒலி இல்லாது பின்னணி இசை மட்டும் உள்ளது. இவற்றை 'டங்ரெக்கி என்கிறார்கள். ரெக்கி டிஸ்கோவில் டிஸ்கி ஜாக்கிகள் டப்ரெக்கியை இசைத்து அதன் பின் வேகமாய் சொற்களைச் சேர்த்துப் பாடுகிறார்கள். பாப் மார்லி இசைக் குழு ரெக்கியை உலகில் பரப்பிய பெருமையை அடைகிறது.

சுதந்திரத்தின் பொன்விழா ஆண்டில் அம்புலிமாமாவின் காணிக்கை

# முதலாவது சுதந்திரப் போர்



(வியாபாரம் செய்ய வந்த கிழக்கிந்தியக் கம்பெனி நம் நாட்டு அரசர்கள் அனுமதி பெற்று ஆங்காங்கு கோட்டைகளைக் கட்டியது. சூழ்ச்சிகளால் சிறு நாடுகளையும் கைப்பற்றியது. அரசர்கள் சுவீகாரம் எடுத்துக் கொள்ளக் கூடாது எனக் கூறி பேஷ்வா பாஜீராவின் தத்து மகனான நானா சாஹிபை இளவரசனாக ஏற்க மறுத்தது. மகப்பேறு இல்லாமல் ஜான்ஸி மன்னர் இறந்ததால் அந் நாடு தனதே எனக் கம்பெனி கூறியது. இதனால் ஜான்ஸி ராணி லட்சுமி பாய் ஆத்திரமடைந்தாள். நாளுக்கு நாள் மக்களும் கம்பெனியின் இவ்வித நடவடிக்கைகளால் வெறுப்படைந்தனர். பிறகு—)

அந்த பௌர்ணமி நிலவில் பளபளக்கும் ஆடைகளையும் ரத்தினங்கள் பதித்த தலைப் பாகையும் அணிந்த இளம் வீரன் ஒருவன் குதிரையின் மீதமர்ந்து மீரட் எல்லையில் கங்கை நதிக் கரை வழியே வந்தான். ஒரு மரத்தடியே தன் குதிரையை நிறுத்தி அதிலிருந்து அவன் கீழே இறங்கினான்.

அப்போது அருகிலிருந்து புதர்களிலிருந்து இருபத்தைந்து வீரர்கள் வெளியே வந்து அந்த இளம் வீரனின் முன் பணிவுடன் நின்றார்கள். அப்போது அவர்களில் ஒருவன் ''பேஷ்வாவிற்கு வணக்கம். தங்கள் வரவு நல்வரவு ஆகுக'' என்றான்.

அந்த இளம் வீரனும் ''சகோதரர்களே! உங்கள் அன்பிற்கு என் நன்றி. உங்களது அன்பு உண்மையானதென்றால் இப்போது நீங்கள் பணிபுரிந்து

வரும் எஜமானனை விட்டுவிட்டு வர வேண்டும். வெறும் வார்த்தைகளி லும் வறட்டு கௌரவத்தின் மீதும் எனக்கு நம்பிக்கை இல்லை'' என்று கூறினான். அவன் வேறு யாருமல்ல நானா சாஹப்தான்.

அவ் வீரர்களில் ஒருவன் ''நாங்கள் வெள்ளைக்காரர்களை எங்கள் எஜமா னனாகக் கருதுவது இல்லை. நீங்கள் தாம் எங்கள் எஜமானர். உங்கள் கட்ட ளைப்படி நடக்கத் தயாராக இருக்கி றோம்'' என்றான்.

மற்றொரு சிப்பாயோ ''பிரபுவே! தினமும் அவர்கள் எங்களை அவமா னப்படுத்துவதை எங்களால் சகிக்க முடியவில்லை. நம் கடவுள்களை அவமதிக்கிறார்கள். நம் முஸ்லீம் சகோதரர்களின் நம்பிக்கைகளைத் தகர்க்க முயல்கிறார்கள். ஒரு நாள் எம் நண்பர்களில் ஒருவன் அந்த ஆங்கிலே யர்களின் பாதிரி ஒருவரிடம் துணிந்து ''நாங்கள் எல்லா மதத்தினரையும் சமமாகக் கருதுகிறோம். உங்கள் கட வுளை அவமதிப்பது இல்லையே. எங் களை எங்களது போக்கிலேயே விட்டு விடுங்கள்'' என்றான். அவ்வளவு தான். பதில் வார்த்தைகளில் கிடைக்க வில்லை. சவுக்கடிகள்தான் அவனுக் குக் கிடைத்தன'' என்றான்.

இன்னொரு சிப்பாய் ''நாங்கள் பிழைப்பிற்காக ஆங்கிலேயரிடம் சிப் பாய்களாகச் சேர்ந்தோம். எங்களில் சிலர் தம் திறமையால் படையில் சிறு அதிகாரிகளாகவும் பதவி உயர்வு பெற் றனர். ஆனால் அவர்களுக்கு அதே நிலைகளிலுள்ள வெள்ளைக்கார அதி காரிகளுக்குக் கொடுக்கப்படும் சம்பள மும் மற்ற வசதிகளும் கொடுக்கப்படு கிறதில்லை. இந்த அநியாயத்தைச் சகித்துக் கொண்டு எவ்வளவு காலம் தான் இருக்க முடியும்?'' என்றான்.

வேறொரு சிப்பாய் ''இப்போது புதிதாக ஒரு பிரச்னை தோன்றியுள் ளது. கம்பெனி புதிய ரகத் துப்பாக்கிக





ளைப் பயன்படுத்த வேண்டுமென்று வற்புறுத்துகிறது. இந்தத் துப்பாக்கிகளில் பயன்படுத்தும் தோட்டாக்களின் உறைகள் மீது பசு மாட்டின் கொழுப்பும் பன்றிக் கொழுப்பும் தடவப்பட்டுள்ளது. இந்தத் தோட்டாக்களைத் துப்பாக்கிகளுள் போடு முன் அவற்றின் உறைகளைப் பற்களால் கடித்துக் கிழிக்க வேண்டியுள்ளது. ஹிந்துக்களும் முஸ்லீம்களும் தம் மத நம்பிக்கைகள் தகர்க்கப்படுவதாக மனம் புழுங்குகிறார்கள்.'' என்றான்.

வேறொருவன் ''மங்கள் பாண்டேயின் ஆவி தினமும் இரவில் என் முன் தோன்றுகிறது. மங்கள் பாண்டே துணிச்சல் மிக்கவரே. ஆனால் அவசரமாகச்செயல்படுபவர். வெள்ளைக்காரர்களிடமிருந்து எப்போது நம் நாட்டை விடுவிக்கப் போகிறாய் என்று தினமும் அவரது ஆவி கேட்கிறது'' என்றான்.

மங்கள் பாண்டேயைப் பற்றி நானா சாஹப் நன்கு அறிவார். பாரக்பூரிலே மிகவும் தைரியசாலி என அவர் பெயர் பெற்றவர். அவர் இருந்த படைப் பகுதிக்கும் கொழுப்பு தடவிய தோட்டாக்கள் கொடுக்கப்பட்டன. அது வேண்டாமென சிப்பாய்கள் அதிகாரிகளிடம் கூறினார்கள். ஆனால் அதிகாரிகள் அவர்கள் கூறியதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. இதனால் மங்கள் பாண்டே சீறி எழுந்து ''வாருங்கள் கலகம் செய்வோம்'' என்று குரல் கொடுத்தார். அது கேட்டு சிப்பாய்கள் ஓடிவந்தனர். அப்போது சார்ஜன்ட் மேஜர் ஹக்ஸன் மங்கள் பாண்டேயைப் பிடிக்க ஓடினான். ஆனால் மங்கள் பாண்டே அவனைச் சுட்டுக் கொன்றார். அப்போது அங்கு வந்த வேறொரு அதிகாரி மங்கள் பாண்டேயைக் கத்தியால் குத்தினான். அதன் பிறகு மங்கள் பாண்டே தூக்கிலிடப்பட்டார்.

நானா சாஹப் சிப்பாய்கள் கூறியதை எல்லாம் கேட்டுவிட்டு ''நான் மங்கள் பாண்டேக்குத் தலை வணங்குகிறேன். அவரது வீரச் செயல் நமக்கு ஊக்கம் அளிக்கிறது. ஆனால் அவரைப் போல நாம் அவசரப் படக் கூடாது. அதனால் விரும்பும் பலன் கிடைக்காது. நாம் வெள்ளையர்களை வெளியேற்ற வேண்டும். இதைக்கருத்தில் கொண்டு ஒரு நாளைக் குறிப்பிட்டு அன்று எல்லோரும் புரட்சி செய்ய வேண்டும். அந்த தேதியை பிறகு நான் உங்களுக்கு அறிவிக்கிறேன்'' என்றார்.

அப்போது ஒரு சிப்பாய் ''அது வரை கைகட்டிக் கொண்டு எதுவும் செய்யாமல் தான் இருக்க வேண் டுமா?'' என்று கேட்டான். நானா சாஹபும் செயல்படவே வேண்டும். நம் கருத்தோடு ஒத்துப் போகும் சிப் பாய்களை ஒன்று கூட்டவேண்டும். அவர்களிடம் விஷயத்தை விளக்கிக் கூறி அவர்களை நம்மோடு இருத்திக் கொள்ள வேண்டும். புரட்சிக்கான திட்டங்களை ரகசியமாகத் தீட்ட வேண்டும்'' என்றான்.

சிப்பாய்களும் அப்படியே செய்ய லாம் எனக் கூறி நானா சாஹப்பைத் தம்தலைவராக ஏற்பதாகக்கூறிவிட்டு புறப்படத்தயாரானார்கள். அப்போது நானா சாஹப் அவர்களிடம் ''நம் எதிரியை குறைத்து மதிப்பிட்டுவிடக் கூடாது. பல்லாயிரமைல்கள்தொலை விலிருந்து வந்த இந்த வெள்ளையர் கள் எவ்வளவு சாமர்த்தியமாக நம் நாடுகளைக் கைப்பற்றிவிட்டார்கள் என்பதைப்பார்த்தீர்களா? அவர்களது ஒற்றர்கள் நம் திட்டங்களையெல் லாம் கண்டுபிடித்துவிடுவார்கள் என் னும் அபாயம் உள்ளது. எனவே நாம் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்'' என்றார். சிப்பாய்களும் எச்சரிக்கையுடன் இருப்பதாகக் கூறி விட்டுச் சென்றனர்.

'நானா சாஹப் ரகசியமாக நாட் டின் பல பகுதிகளைச் சுற்றிப் பார்த் தார். சமஸ்தான மன்னர்களையும் நிலச்சுவான்தாரர்களையும் கண்டு தம் புரட்சிக்கு ஆதரவு அளிக்கும்படிக் கேட்டுக்கொண்டார். அவரே செல்ல முடியாத பகுதிகளுக்குத் தம் படைத் தலைவரான தாந்தியாதோபியை



அனுப்பினார். தம் அமைச்சர் அஜீ முல்லாகானையும் சிலரிடம் அனுப்பி னார். நானாசாஹபின் தம்பி பாலாசா ஹப் அவரது மெய்க் காவலர் போல அவருடனேயே எப்போதும் இருந்து வந்தார்.

ஒருநாள் இரு சகோதரர்களும் பிட்டூரிலுள்ள தம் அரண்மனைக்குச் சென்றனர். அப்போது ஒரு வீரன் வந்து ''பிரபுவே! தங்களைக் காண ஜான்ஸி ராணி லட்சுமிபாய் வந்திருக்கிறார்'' எனக் கூறினான். நானாசாஹப் வேறு எந்த வேலையையும் கவனிக்காமல் உடனே லட்சுமிபாயைக்காணச்சென் றார். லட்சுமி பாயும் நானாசாஹப்பை விழுந்து வணங்கினாள். நானாசாப் அவ்வாறு செய்வதைத் தடுத்தவாறே ''இதென்ன! திடீரென்று நீ இங்கு வந்திருக்கிறாய்?'' என்று கேட்டார்.

லட்சுமி பாயும் ''ஒரு சகோதரன் வீட்டிற்கு தங்கை எப்போதும் வர லாமே. உரிமையுடன் எதையும் கேட்க லாம். அதனால் தான் நான் வந்திருக்கி றேன்.'' என்றாள். நானா சாஹப்பும் ''ஆகா. தாராளமாக வரலாம். எதை யும் அண்ணனிடம் கேட்கலாம். நீ இவ்வளவு தூரம் சிரமப்பட்டுக் கொண்டு வந்திருக்க வேண்டாமே யாராவது ஒருவனிடம் சொல்லி அனுப்பி இருந்தால் நானே வந்திருப் பேனே'' என் றார்.

லட்சுமி பாயும் ''ஆங்கிலேயரை எதிர்க்க வேண்டிய நிலை எனக்கு ஏற் பட்டிருக்கிறது. அதனால்தான் எங் கெங்கோ திரிந்து கொண்டிருக்கும் உங்களை நேரில் கண்டு பிரச்னை யைக் கூறவே வந்தேன்'' என்றாள்.

நானா சாஹப்பும் ''ஆங்கிலேயர் களை எதிர்க்கும் நிலையா? ஏன் அவர் கள் உன் நாட்டைக் கைப்பற்ற முயல் கிறார்களா? அவர்களது நோக்கம் இந்த உன் அண்ணன் உயிருடன் இருக் கும் வரை நடக்காது கவலைப் படாதே. இந்த ஆங்கிலேயர்களே நம் நாட்டை விட்டு ஓடிப் போகும் நாள் தொலை வில் இல்லை'' என்று ஆறு தல் கூறிக் கொண்டிருந்தார்.

அப்போது மூச்சிரைக்க ஓடி வந்த வீரன் ஒருவன் நானா சாஹப்பிடம் ''மீரட்டில் கலகம் ஆரம்பித்து விட் டது'' என்று தெரிவித்தான். நானா சாஹப் ஆச்சரியப்பட்டவாறே ''இப் போதேயா ஆரம்பித்து விட்டார் கள்?'' என்று கேட்டார். அவனும் ''கொழுப்பு தடவிய உறைகளுடன் தோட்டாக்களைக் கம்பனி கொடுத்து அவற்றை உபயோகிக்கும்படி சிப் பாய்களிடம் கூறியது. அவர்கள் எல் லோரும் மறுக்கவே அவர்களை விலங்கிட்டு சிறையில் ஆங்கில அதி காரிகள் அடைத்தார்கள். அவர்களுக் குப் பத்து வருடங் கடுங்காவல் தண் டனை விதிக்கப்பட்டது'' என்றான்.

அதன் பிறகு என்ன நடந்தது என்று நானா சாஹப் கேட்கவே அவனும் ''மறு நாளிரவு மற்ற சிப்பாய்கள் கல கம் செய்தார்கள். சிறைப்பட்ட சிப் பாய்களின் விலங்குகளை வெட்டி அவர்களை விடுவித்தார்கள். வெள் ளைக் காரர்களின் வீடுகளைத் தீக்கு இரையாக்கினார்கள். நகரில் ஒரே கொந்தளிப்பாக உள்ளது'' என்றான்.

**(தொடரும்)**





# அம்மனின் அறிவுரை

மாலையில் வீட்டு வேலைகளை முடித்து விட்டு ஹேமா உட்கார்ந்து கொண்டு மல்லிகைப் பூமாலை தொடுத்துக் கொண்டிருந்தாள். அப்போது தன் வீட்டு வாசலில் தன் ஓரகத்தியின் குதிரை வண்டி வந்து நின்றது கண்டு அவள் மனதில் ''இவள் இப்போது ஏன் வருகிறாள்?'' என்று யோசிக்கலானாள்.

உடல் முழுவதும் நகைகளாகப் போட்டுக் கொண்டிருந்த பாமா வண்டியிலிருந்து இறங்கி வீட்டினுள் வந்தாள். அவள் ஹேமாவிடம் ''புதிதாகச் செப்பனிட்ட நம் ஊர் அம்மன் கோவிலுக்கு போய் வரலாமென நினைத்துக் கிளம்பினேன். உங்களையும் அழைத்துக் கொண்டு கோவிலுக்குப் போகலாம் என்றுதான் வந்தேன்'' என்றாள்.

ஹேமாவின் கணவனும் பாமாவின் கணவனும் அண்ணன் தம்பிகள். தந்தை இறந்த பின் இருவரும் பாகப் பிரிவினை செய்து கொண்டு தனித் தனி வீடுகளில் வசித்து வந்தனர். ஹேமாவின் கணவன் விவசாயம் செய்து வரலானான். நேர்மையுடனும் நாணயமாயும் இருப்பவன் எனப் பெயர் பெற்றவன். பாமாவின் கணவன் வியாபாரத்தில் ஈடுபட்டுக் குறுக்கு வழிகளில் இறங்கிப் பணம் திரட்டி ஊர்ப் பிரமுகர்களில் ஒருவனாக ஆகி விட்டான்.

பணக்காரியான பாமா என்றுமே ஹேமாவைத் தன் அந்தஸ்திற்குச் சமமானவள் என்று கருதியதே இல்லை. அன்று அவளை பாமா மதித்துக் கோவிலுக்கு வரும்படி அழைத்ததும் உடனே ஹேமா அவளுடன் கிளம்பிச் சென்றாள். இருவரும் அம்மனின் கோவிலை அடையும் போது நன்கு இருட்டி விட்டது. கோவில் விளக்குகள் பளிச்சென்று பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தன.

பாமாவைக்கண்டதும் கோவிலின்

—பாபநாசம் சாமா—



இருக்கும் போதே புண்ணியம் சம் பாதிக்கவும், என் பெயர் என்றென் றும் நிலைத்திருக்கவும் இந்த நன் கொடையை அளித்தேன்'' என்றாள்.

அப்போது கோவில் தர்மகர்த்தா பாமாவிடம்''இவருடையகணவரும் இந்த மாதிரி ஏதாவது ஒரு புண்ணிய காரியம் செய்யலாம். ஒரு ஐம்பதா யிரம் ரூபாய் நன்கொடை கொடுத்து அம்மனுக்கு ஏதாவது நகை செய்து போட்டால் உங்கள் பெயரையும் பாமா அம்மாளின் பெயரின் கீழ் பொறித்து விடுவோம்'' என்றார். ஹேமாவும் சற்று யோசித்து விட்டு ''என்கணவரால் இருபத்தையாயிரம் ரூபாய் கொடுக்க முடியும். அதுவும் இந்த அறுவடை முடிந்த பிறகு தான். அதைக் கொடுத்ததும் அம்மனுக்கு ஒரு மாலை செய்து அணிவியுங்கள்'' என்றாள்.

பாமாவும் ''அப்போது இவள் பெயரையும் எல்லார் கண்களிலும் படும்படிப் பெரிதாகச் சலவைக்கல் லில் பொறித்து விடுங்கள்'' என்றாள். அதன் பின் ஹேமாவைத் தன் வண்டி யில் ஏற்றிக் கொண்டு பாமா அவளது வீட்டில் விட்டு விட்டுச் சென்றாள்.

சில நாட்களுக்குப் பின் ஹேமா வின் கணவனின் வயலில் அறுவடை முடிந்தது. பயிரை விற்று இருபத்தை யாயிரம் ரூபாய் அவன் கைக்கு வந் தது. அப்போது திடீரென ஹேமாவின் சிறிய மாமனார் ஊரிலிருந்து வந்தார். தன்கணவன்தான் அவரைவரவழைத் துள்ளாரென அறிந்த ஹேமா ''இவரை ஏன் வரச் சொன்னீர்கள்?'' என்று கேட்டாள்.

அவனும் ''இவர் இருதயநோயால்

தர்மகர்த்தா ஓடோடி வந்து அவளை யும் ஹேமாவையும் அழைத்துச் சென் றார். கோவில் சுவர்களில் சலவைக் கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. அவற் றில் ஒன்றில் பாமாவின் பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. அதை பாமா ஹேமாவிற்குக் காட்டி ''நான் இக் கோவிலுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் நன்கொடை கொடுத்து ஒரு தங்க ஒட்டியாணம் செய்து போடச் சொன் னேன். அதற்காகத்தான் என் பெயர் சலவைக் கல்லில் பொறிக்கப்பட்டி ருக்கிறது'' என்றாள்.

அப்போதுதான் ஹேமாவுக்குத் தன்னை பாமா ஏன் கோவிலுக்கு அழைத்து வந்தாள் என்று புரிந்தது. அப்போது பாமா ''நாம் இன்று இருக் கிறோம். நாளை இருப்போமோ என் பது தெரியாது. அதனால் உயிருடன்

கஷ்டப்படுகிறார். அதற்கு வைத்தியம் செய்யப் பணம் வேண்டும். அவர் இருந்து தன் மூன்று பெண்களுக்கும் கல்யாணம் செய்ய வேண்டும். முதல் பெண்ணுக்கு அவர் ஒரு வரனைப் பார்த்திருக்கிறார். அந்தக் கல்யாணச் செலவுக்கும் அவரது வைத்தியத்திற்கும் அவருக்கு இருபத்தையாயிரம் ரூபாய் தேவை. அவருக்கு நான் பணம் கடனாகக் கொடுக்கப் போகிறேன்'' என்றான்.

ஹேமாவோ ''இது திரும்பி வராத கடன். இதனால் புண்ணியமா கிடைக்கும்? அந்த இருபத்தையாயிரம் ரூபாய் எனக்கு வேண்டும். அம்மனுக்கு நகை செய்து போட. இந்தத் தொகையைக் கோவிலுக்கு நன்கொடையாகக் கொடுத்துப் புண்ணியம் சம்பாதித்துக் கொள்ளப் போகிறேன்'' என்றாள்.

அவளது கணவனோ ''இதை விட ஒரு ஏழைக்குடும்பத்திற்குப் பணம் கொடுத்து உதவுவது தான் உயரிய புண்ணியம் கொடுக்கும் செயல். கோவிலுக்கு நீ நன்கொடை அளித்தால் உன் பெயரை கோவிலின் சுவரில் சலவைக் கல்லில் பொறிப்பார்கள். இது தான் நீ விரும்பும் புண்ணியமா?'' என்று கேட்டான்.

ஹேமாவோ ''நீங்கள் என்ன சொன்னாலும் கேட்க மாட்டேன். கோவிலுக்கு நன்கொடை கொடுப்பதால் புண்ணியம் கிடைக்காது என்று யாருமே சொல்ல மாட்டார்கள்'' என்றாள்.

இவர்கள் இவ்வாறு பேசி விட்டு ஊரிலிருந்து வந்தவரைப் பார்க்க வந்தார்கள். ஆனால் அவர் அங்கே தென்படவில்லை. ஹேமாவின் கணவன்



''நான் பேசியதை அவர் கேட்டிருக்க வேண்டும் அதனால்தான் மன வேதனையுடன் ஊருக்குப் போய் விட்டார் போலிருக்கிறது'' என்றான் பெருமூச்சு விட்டவாறே.

ஹேமாவோ ''அவர் போய் விட்டதால் நமக்கு ஒரு நஷ்டமும் இல்லை. நான் இன்று மாலை கோவிலுக்குப் போய் இந்தப் பணத்தைக் கொடுக்கிறேன்'' என்றாள். அன்று மாலை அவள் பணத்தை ஒரு பையில் போட்டு எடுத்துக் கொண்டு அம்மன் கோவிலுக்குச் சென்றாள். அப்போது கோவில் தர்மகர்த்தா அங்கே இருக்கவில்லை, எங்கே போயிருந்தார். அவர் வருவதற்குச் சற்று நேரமாகலாம் என்று தெரிந்தது. அதனால் கோவில் வெளிப் பிராகாரத்தை அவள் சுற்றி வரச் சென்றாள்.



அங்கே ஓரிடத்தில் மரத்தின் கீழ் ஒரு சாது அமர்ந்திருந்தார். அவருக்குச் சற்று தூரத்தில் வயதான சுமங்கலி ஒருத்தி உட்கார்ந்திருந்தாள். அவள் ஹேமாவைக் கண்டதும் அவளைத் தன்னருகே அழைத்து ''எனக்கு ஒரு உதவி செய் பெண்ணே! இதோ புளி யோதரையும் லட்டுவும் உள்ளன. இவற்றை எல்லாருக்கும் வினியோ கிக்க வேண்டும். திடீரென என் இடுப்பு சுளுக்கிக் கொண்டு விட்டது. என்னால் எழுந்திருக்க முடிய வில்லை'' என்றாள்.

ஹேமாவும் ''இந்தக் கோவிலில் இவ்வளவு தான தர்மங்களைச் செய் கிறீர்களே. இவை பற்றி நீங்கள் கோவில் தர்மகர்த்தாவிடம் கூறினால் உங்கள் பெயரை சலகைக் கல்லில் பொறித்து விடுவாரே'' என்றாள்.

அதற்கு அந்தப் பெண்மணி ''நாம் செய்யும் தான தர்மங்களுக்கு விளம் பரமா? கூடாது. இது பிறருக்கு உதவி யாக இருக்க வேண்டும். நமக்கு மன நிறைவையும் கொடுக்க வேண்டும். இதைக் கோவிலிலும் செய்யலாம். அல்லது வேறு எங்கு வேண்டுமானா லும் செய்யலாம்'' என்றாள்.

ஹேமா ''இதைக் கோவிலுக்குள் இருப்பவர்களுக்கு மட்டும்தானே கொடுக்க வேண்டும்?'' என்று கேட் கவே அந்தப் பெண்மணியும் ''முத லில் கோவிலுக்கு வெளியே உள்ள ஏழை எளியவர்களுக்குக் கொடுத்து விட்டு மீதமிருந்தால் கோவிலுக்குள் இருப்பவர்களுக்கும் கொடு. பசியால் வாடுபவர்களுக்கும் கஷ்டப்படுபவர் களுக்கும்தான் முதலில் உதவ வேண் டும்'' என்றாள்.

ஹேமாவும் அந்தப் பெண்மணி விரும்பியபடியே செய்து விட்டு மறு படியும் அப்பெண்மணியைக் காண வந்தாள். அந்தப் பெண்மணி அங்கு இருக்கவில்லை. மரத்தடியே சாது மட்டும் இருந்தார். அவரிடம் அவள் அப்பெண்மணியைப் பற்றிக் கேட் கவே அவரும் ''யாரை கேட்கிறாய்? வயதான, இடுப்பு சுளுக்கிக் கொண்ட பெரிய குங்குமப் பொட்டை நெற்றி யில் வைத்துக் கொண்டு சிவப்பு நிறப் புடவையைக்கட்டிக்கொண்டு இங்கே உட்கார்ந்திருந்தாளே. அவளா?'' என்று கேட்டார்.

''ஆமாம். அவளேதான். தன் பெயர் கூட துர்க்கா என்று கூறி னாளே'' என்று ஹேமா கூறவே சாது வும் ''ஆகா! நீதான் எவ்வளவு புண்ணி யம் செய்தவள்! நீ அந்த துர்க்கை அம்

மனையே தரிசித்து விட்டாய். இதற்கு முன்பும் ஓரிருவர் முன் இதே உருவத்தில் அம்மன் தோன்றி இருக்கிறாள். நான் தினமும் மணிக்கணக்கில் இங்கே அமர்ந்து அவளை தியானித்த போதிலும் அவள் எனக்குக் காட்சி அளிக்கவில்லையே. உனக்கு அவள் காட்சி அளித்தாள். நீதான் எவ்வளவு பாக்கியசாலி'' என்று கூறிக் கை கூப்பி வணங்கினார்.

அதைக் கேட்ட ஹேமாவின் மெய் சிலிர்த்தது. அந்தக் கிழச் சுமங்கலி கூறியது அவள் காதில் இன்னமும் ஒலித்துக் கொண்டே இருந்தது. சுவரில் பெயர் பொறிக்கப்படுவதை விட ஏழை எளியவர்களுக்கு உதவுவதுதான் மேல் என அந்தப் பெண்மணி கூறினாள். கூறியது சாதாரணப் பிறவியா? சாட்சாத் துர்க்கை அம்மனே அல்லவா கூறினாள்! ஆம். அம்மனுக்கு நகை செய்து போடுவதை விட கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் தன் சிறிய மாமனாருக்குப் பணத்தைக் கொடுப்பதே சிறந்தது என்றுஅவள் தீர்மானித்துக் கொண்டாள்.

அவள் தர்மகர்த்தாவின் வருகைக்காகக் கோவிலில் காத்திருக்கவில்லை உடனேயே வீட்டிற்குத் திரும்பிப் போய் பணப்பையைத் தன் கணவனிடம் கொடுத்து ''இதைக் கொண்டு போய் உங்கள் சிற்றப்பாவிடம் கொடுங்கள். அவர் தனக்கு வைத்தியம் செய்து கொண்டு தன் மகளின் திருமணத்தையும் நடத்தட்டும்'' என்றாள்.

ஒரு மாதமாயிற்று. ஹேமாவின் கணவன் தன் சிற்றப்பாவின் மகளின் திருமண அழைப்பிதழைத் தன் நண்பனிடம் கொடுத்தவாறே ''இது அழைப்பிதழானாலும் நீயும் உன் மனைவியும் திருமணத்திற்கு மட்டும் வந்து விடக்கூடாது. ஏனெனில்அன்று கோவிலில் சாதுவாயும், கிழச் சுமங்கிலியாயும் வேஷம் போட்டுக் கொண்டு வந்தவர்கள் நீங்களே என்று என் மனைவி அடையாளம் கண்டு கொண்டு விடுவாள். நீங்கள் செய்த இந்த மேலான உதவியை என்றென்றும் மறக்க மாட்டேன்'' என்று சிரித்துக் கொண்டே கூறினான்.

அந்த நண்பனும் ''ஒரு நல்ல காரியம் நடப்பதற்காக இப்படி வேஷம் போட்டு நடித்தால் அம்மன் எங்களை ஒன்றும் செய்ய மாட்டாள்'' என்றான் சிரித்தபடியே.



## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1998 ஜனவரி மாத இதழில் வெளியிடப்படும்.



DHARM NATH PRASAD



DHARM NATH PRASAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ நவம்பர் 25-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.**

### செப்டம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **கேளிக்கை குதிரை ஓட்டம்.**

இரண்டாவது போட்டோ : **வாடிக்கை வாழ்க்கைப் போராட்டம்.**

பரிசு பெற்றவர் : **ஆர். சோபனா, தாசில் நகர், மதுரை-20.**




Printed by B.V. REDDI at Prasad Process Pvivate Ltd., Chandamama Building, Chennai- 600 026 (India) and Published by B. VISHWANATH A REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, 188, N.S.K.Salai, Vadapalani, Chennai- 600 026 (India) Editor : NAGI REDDI.

Regd. No. M. 4863/97
RN 1095 / 57